


**இந்நூலைப் பெற : www.eStore.ValaiTamil.Com**



**தொடர்புக்கு**

**Email:** Kural.Mutrothal@gmail.com

**WhatsApp:** +91 7305571897

# “குறள் வழி” மாத இதழ்

## (தனிச்சுற்றுக்கு மட்டும்)

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் செய்திகளை, செயல்பாடுகளை, நிகழ்ச்சிகளை, திருக்குறள் சார்ந்த உலக முன்னெடுப்புகளை, பரப்புரைகளை தாங்கி மாதம் ஒருமுறை வரும் இதழ்.



### ஏப்ரல் 2024 மாத, “குறள் வழி” மாத இதழ் உங்கள் வாசிப்பிற்கு

- Magazine Page: https://www.valaitamil.com/literature_thirukkural_kural-vazhi/
- To download as PDF: https://drive.google.com/file/d/1u9TjdSL7ObSon02IuMyiEL0mRuenZn84/view?usp=sharing

**உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுத, படைப்புகளை அனுப்ப** : kural.mutrothal@gmail.com

Facebook Page to LIKE and SHARE: https://www.facebook.com/groups/245630171535251

உங்கள் மாவட்டத்தில், உங்கள் அமைப்பில் நடைபெறும் திருக்குறள் சார்ந்த நிகழ்வுகளை எங்களுக்கு அனுப்பவும். மேலும், இவ்விதழ் குறித்த உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுதி அடுத்த இதழில் வாசகர் பகுதியில் இடம்பெறச் செய்யவும்.



# உள்ளே...

# ஆசிரியர் பக்கம்

தமிழ் உறவுகளுக்கு வணக்கம்,

திருக்குறள் முற்றோதல் இயக்கம் தற்போதுதான் சில அடிகளை எடுத்துவைத்துள்ளது. அரசு 15000 பரிசு கொடுத்தாலும் மாணவர்கள் திருக்குறள் படிக்க வருவதில்லை என்ற நிலையை மாற்றி திருக்குறள் படிக்க மாணவர்களை வரிசைகட்டி நிற்கவைக்க, விழிப்புணர்வை ஏற்படுத்த நாம் செல்லவேண்டிய தொலைவு அதிகம். நம் இயக்கத்தின் ஒவ்வொருவரும் அவரவர் மாவட்டத்தில் என்ன செய்யமுடியும் என்று தொடர்ந்து சிந்திக்கவேண்டும். எவருக்கும் எதிர்பார்க்காமல், 2024 வகுக்கப்பட்ட நம் இலக்கை நோக்கி புதிய உத்திகளுடன் அனைவரும் பயணிக்கவேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். இன்னும் நிறையத் திருக்குறள் அமைப்புகள், தனி மனிதர்கள் தங்களால் முடிந்ததை அவர்கள் ஊர்களில் செய்துகொண்டுள்ளார்கள். அவர்களை அடையாளம் கண்டு நம்மோடு தொடர்பில் கொண்டுவந்து அவர்கள் சேவையை விரிவாக்க நம்மிடம் உள்ள செயல்திட்டங்கள், தொழில்நுட்பத்தைப் பயன்படுத்த அறிமுகம் செய்யவேண்டும். அவர்களும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்துடன் கைகோர்த்து, அவரவர் தனித்துவமும், அடையாளமும் மாறாமல் அப்படியே பயணிக்கமுடியும்.

நாம் இன்னும் சில மாவட்டத்திற்குப் பயிற்சியாளர், ஒருங்கிணைப்பாளர், புரவலர் என மூவரை அடையாளம் கண்டு மாவட்டத்தைத் தற்சார்பு திருக்குறள் மாவட்டமாக அறிவிக்கவேண்டும். தொடர்ந்து நாம் செல்லும் இடமெல்லாம் நம் தேவைகளைக் கவனத்தில் கொண்டு திறமையானவர்களை அடையாளம் கண்டு அறிமுகம் செய்யவேண்டும்.

தமிழ்நாடு மட்டுமல்லாமல், பிற மாநிலங்களிலும், வெளிநாடுகளிலும் முற்றோதல் இயக்கத்தின் பயிற்சியைத் தொடங்கவிருக்கிறோம். திருக்குறள் முற்றோதல் என்பது உலகளாவிய ஒரு பயணம். எனவே உலகத் தமிழர்கள் நம் பயிற்சியாளர்களை அவரவர் மாவட்டங்களை அறிந்து பயன்படுத்திக்கொள்ளவும்.

உலங்கெங்கும் திருக்குறளுக்கு சந்திப்புகள், மாநாடுகள், பன்னாட்டு கருத்தரங்கங்கள் நடக்கிறது, ஆய்வுக்கட்டுரைகள் எழுதப்படுகின்றன, ஆய்வு நூல்கள் வருகிறது. அவைகள் மேலும் தரப்படுத்தப்படவேண்டும் என்ற கோரிக்கைகளையும், ஆய்வுக்கட்டுரை என்ற உயரத்தில் அவை இருக்கவேண்டும் என்பதை உறுதிப்படுத்த அனைவரையும் தொடர்ந்து வலியுறுத்துகிறோம்.

குறிப்பாக திருக்குறளுக்காக விழா எடுக்கும்போது திருக்குறள் நூல்களைத் தாண்டி, சந்திப்புகள், உரைகளுக்கு அப்பால் சில செயல்பாடுகளையும் இணைத்துக்கொள்ள வலியுறுத்துகிறோம். மாநாடுகள் விழிப்புணர்வை ஏற்படுத்தும், சிந்திக்கவைக்கும் என்பது முக்கியமானதுதான். அதே மாநாடு விளைவுகளை ஏற்படுத்தும் செயல் இலக்குகளையும்

இணைத்துக்கொண்டு நடைபெற்றால், பெரும் பயனை அந்த கருத்தியலை ஒட்டி ஏற்படுத்தும் என்பதை வலியுறுத்துகிறோம்.

மாநாடுகள் நடந்தன என்பதைவிட மாநாடுகளில் என்ன நடந்தது என்பதும், மாநாடு முடிந்ததும் மாநாட்டின் கருப்பொருளை ஒட்டிய தொடர் செயல்பாடு என்ன? எந்த ஒரு சிக்கலை ஒவ்வொரு மாநாடும் தீர்த்தது என்று சில நிலைத்த தீர்வை மாநாடு, கருத்தரங்க ஒருங்கிணைப்பாளர்கள் கருத்தில்கொள்ள வேண்டும் என்று இயக்கத்தின் சார்பாக கேட்டுக்கொள்கிறோம்.

உதாரணமாக, இனி உலகெங்கும் நடக்கும் திருக்குறள் சார்ந்த கருத்தரங்கம், மாநாடுகளில் கீழ்காணும் இரண்டு செயல்பாடுகளையும் சேர்த்துக்கொள்ள அன்புடன் கோருகிறோம்.

1) திருக்குறள் முற்றோதல் முடித்து அரசிடம் பரிசு பெற்ற கிராமப்புற மாணவர்கள் இருவரை மாநாட்டில் அழைத்து பெருமைசெய்யவும், அங்குள்ள தமிழ்ப்பள்ளிகள் இவர்களை சில நாட்கள் பயன்படுத்திக்கொள்ளவும் வாய்ப்பு ஏற்படுத்தலாம்.
2) திருக்குறளில் செய்யவேண்டிய அடிப்படை பணிகள் குறிப்பாக தரவுத் தொகுப்புகள் நிறைய உள்ளன. மாநாடு சார்பாக ஒரு நீண்டகால தேவையை எடுத்து சிறு நிதியை ஒதுக்கி செய்துமுடித்தால் மாநாட்டின் தாக்கம் பெரிய அளவில் நிலைத்து நிற்கும்.

உதாரணமாக, திருக்குறளில் இதுவரை செய்யப்பட்ட முனைவர் பட்ட ஆய்வுகளைத் தொகுத்து வெளியிடுதல். திருக்குறளில் வெளிவந்துள்ள திருக்குறள் உரைகளைத் தொகுத்து ஆதாரப்பூர்வமாக வெளியிடுதல்

தொடர்ந்து சிந்திப்போம்.. செயல்படுவோம்.. திருக்குறள் பரப்புவோம்..

திட்ட ஒருங்கிணைப்பாளர்,

**வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி,**




## உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் - என்ன செய்கிறது?

உலகப் பொதுமுறையாம் திருக்குறளை இளம் வயதிலேயே மாணவ மாணவியர் மனப்பாடம் செய்தால் வாழ்நாள் முழுவதும் மனத்தில் நிற்கும். "இளமையில் கல்வி பசுமரத்தாணி" என்பது பழமொழி.

திருக்குறள் மனித இனத்தின், குறிப்பாக தமிழர்களின் மாபெரும் பொதுவுடைமைச் சொத்து. திருக்குறள் நெறிகள் பரவப்பரவ, அறம் பரவும். தமிழ் மொழிப்பயிற்சியும், மாணவர்களுக்குக் கிடைக்கும். அறமும், மொழியும் வளரும். மேலும் அறமும், திறனும், ஒருங்கே வாய்ந்த இளைஞர் சமுதாயம் உருவாகிட வலுவான அடித்தளமாக திருக்குறள் மனனம் அமையும். சமுதாயத்தில் நல்லிணக்கமும், மனித நேயமும் வளரும்.

திருக்குறள் பொருள் பொதிந்த, பொருள் நிறைந்த, இகலில்லா இன்ப வாழ்க்கையின் கையேடு.

கிட்டத்தட்ட 20 ஆண்டுகளுக்கும் மேலாக, 1330 திருக்குறளையும் மனப்பாடம் செய்து ஒப்பிக்கும் மாணவ மாணவியரை ஊக்குவிக்கும் வகையில் தமிழக அரசு சான்றிதழ் மற்றும் பரிசுத் தொகை வழங்கி வருகிறது. திருக்குறள் முற்றோதல் செய்யும் 70 மாணவர்களுக்கு, 2021 ஆம் வருடம் வரை, தலா ரூ.10000/- திருவள்ளுவர் தினத்தன்று அரசு வழங்கி வந்தது.

இந்த சூழ்நிலையில் தமிழக அரசு 2022 ஆம் ஆண்டு சட்டசபையில் 70 மாணவர்கள் என்ற உச்சவரம்பை நீக்கியது.பரிசுத்தொகையும் உயர்த்தப்படும் என்று மாண்புமிகு தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் சட்டசபையில் அறிவித்தார். {தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை. தமிழ் வளர்ச்சி மானியக் கோரிக்கை - 46 அறிவிப்புகள் (2021-2022)}. கடந்த 20 ஆண்டுகளுக்கும் மேலாக இதுவரை ஆண்டுதோறும் பரிசு பெறும் மாணவர்களின் வயதைப் பார்த்தால் 95 விழுக்காடு மாணவ/மாணவியர் 14 வயதுக்குட்பட்டே இருக்கிறார்கள். ஆறு/ஏழாம் வகுப்புக்குள் மனனம் செய்துவிட்டால், பிறகு மேல் வகுப்புகளில் பொருளுணர்ந்து படிக்க ஏதுவாக இருக்கும். தனிவாழ்வில் நிறைவான வாழ்க்கை வாழவும், சமுதாய பிரச்சனைகளை திருக்குறள் துணையுடன் எதிர் கொள்ளவும், இளவயதிலேயே 1330 அருங்குறள் மனனம் பயனுள்ளதாக இருக்கும்.

இந்தப் பின்புலத்தில், வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், சர்வீஸ் டு சொசைட்டி என்ற மூன்று அமைப்புகளும் இணைந்து, தமிழ்நாடு, புதுச்சேரியில் ஏற்கனவே திருக்குறள் முற்றோதல் பயிற்சியளிக்கும் ஆசிரியர்களை ஒருங்கிணைத்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு ஒருங்கிணைப்பாளர், ஒரு பயிற்சியாளர், ஒரு புரவலர் அடையாளம் கண்டு அக்டோபர் 2021ல் தொடங்கப்பட்டது இவ்வியக்கம். எம்முடன் உலகத் தமிழ்வளர்ச்சி மன்றம், USA இணைந்து ஒரு மாவட்டத்திற்கு 2000 திருக்குறள் நூல்கள் வீதம் ஒரு ஆண்டுக்கு 80,000 திருக்குறள் நூல்களையும், ஐந்து ஆண்டுகளுக்கு மொத்தம் 4 லட்சம் நூல்களையும் அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக வழங்க முன்வந்தது

### உங்கள் மாவட்ட திருக்குறள் பரப்புரை தேவைகளுக்கு பொறுப்பேற்க திருக்குறள் புரவலர்களை அழைக்கிறோம்.

*உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. ஒவ்வொரு மாவட்டத்திலும் அந்த மாவட்டத்தை சார்ந்த திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர் ஒருவரை அடையாளம் கண்டு அல்லது உருவாக்கி பகுதிநேர-முழுநேர திருக்குறள் பயிற்சி வழங்க ஊக்கத்தொகை, மாணவர்களுக்கு சான்றிதழ் அச்சடித்தல், "குறள் வழி" இதழுக்கு விளம்பரம் கொடுத்து இலவச இதழ்களை அனுப்ப உதவுதல் என்று சுயமாக உங்கள் மாவட்டத்தில் பொறுப்பேற்க அழைக்கிறோம். ஊர் கூடி பயணிக்கும் திருக்குறள் தேரை இழுக்க வடம் பிடிக்க வாருங்கள். எமக்கு அறம் சார்ந்த வணிகர்கள் அவர்கள் தொழில்களை விளம்பரம் செய்து உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் பரப்புரைக்கு உதவலாம்.*




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் குறிக்கோள்கள்

**1.** தமிழ்நாடு அரசின் புதிய அறிவிப்பைத் தொடர்ந்து, **1330** திருக்குறளையும் மனனம் செய்யும் மாணவர்களை அதிக அளவில் உருவாக்கி, அறம் சார்ந்த, பொருள் வளம்மிக்க நல்லிணக்க சமுதாயத்தைக் கட்டமைத்தல்.

**2.** பள்ளித் தலைமை ஆசிரியர்கள்/ ஆசிரியர்கள், பெற்றோர்களுடன் இணைந்து செயல்பட்டு ஆர்வமும் மனனம் செய்யும் திறனும் மிக்க மாணவர்களை இனம் கண்டு, அவர்களுக்குத் திருக்குறள் முற்றோதல் மனனப் பயிற்சியை 9-ஆம் வகுப்புக்குள் அளித்தல். அவர்களுக்கு அரசு சான்றிதழ் மட்டுமின்றி உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் "திருக்குறள் முற்றோதல்-இளநிலை" சான்றிதழ் வழங்குதல்.

**3.** வயதுக்கு ஏற்ப, முற்றோதல் முடித்த அனைவரும் கல்லூரி செல்வதற்கு முன்பு முழுமையாக குறளின் பொருளை அறிந்துகொள்ள வழிசெய்தல். அதில் நேர்முகத் தேர்வு வைத்து பொருள் உணர்ந்து படித்துள்ளவர்களுக்கு "திருக்குறள் முற்றோதல்-முதுநிலை" சான்றிதழ் வழங்குதல்.

**4.** திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் தகுதியான அனுபவமும் ஆர்வமும் மிக்க முற்றோதல் முடித்த பயிற்சியாளர்களை அடையாளம் கண்டு பயிற்சியாளராகவும், அந்த பயிற்சியாளருக்கு மாதம் ஒரு ஊக்கத்தொகை வழங்க ஒரு புரவலரையும், மாவட்ட ஒருங்கிணைப்பு செய்ய ஒரு ஒருங்கிணைப்பாளரையும் நியமித்தல்.

**5.** தமிழ்நாடு மற்றும் புதுவையில் பள்ளி, கல்லூரி உள்ளிட்ட கல்விக்கூடங்களில் திருக்குறள் சிலை நிறுவவும், மாநிலம் முழுதும் ஒவ்வொரு ஊரிலும் ஒரு திருவள்ளுவர் சிலை வைத்து திருக்குறள் மறையோதல் செய்து வாழ்வியல் கருத்துகளை உள்வாங்கி வாழ்க்கையை முன்னுதாரணமாக திருக்குறள் வழியில் அமைத்துக்கொள்ள அரசுகளுடன்,அமைப்புகளுடன் உரையாடி உரிய வழிவகை செய்வது. ஒவ்வொரு ஆண்டும் திருவள்ளுவர் நாளில், திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள் அனைவரும் அந்தந்த மாவட்டத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட திருவள்ளுவர் சிலையின் முன் ஒன்றுகூடி, தமிழ் வளர்ச்சித்துறை, மாவட்ட நிர்வாகம் ஆகியவற்றுடன் இணைந்து குழுவாக "திருக்குறள் முற்றோதல்" செய்து, கற்றதை மறந்துவிடாமல் இருக்க வழிசெய்தல்.

**6.** குறள் முற்றோதல் முடித்த அனைவரின் விவரங்களையும் இணையத்தில் பட்டியலிட்டு, வரிசை எண் கொடுத்து அவர்கள் ஒருங்கிணைந்த வளர்ச்சியை, வெற்றியைப் பெற துணைநிற்றல்.

**7.** குறள் முற்றோதல் முடித்த அனைவரும் ஒருவருக்கொருவர் துணை நின்று கல்வி, வேலைவாய்ப்பு, மகிழ்ச்சியான, நிறைவான வாழ்க்கையை வாழவும், வேலைவாய்ப்பில், தொழிலில் வெற்றிபெறவும் முன்னுரிமை கொடுத்து அவர்களுக்கு உரிய உதவிகளைப் பெற துணைநிற்றல்.

**8.** திருக்குறள் முற்றோதல் முடித்த மாணவர்களுக்கு அரசு வேலைவாய்ப்பில் **5%** முன்னுரிமை வழங்க கோரிக்கை வைத்து முயற்சி மேற்கொள்ளப்படும்.

**9.** பள்ளிகளில் காலையில் ஒரு திருக்குறள் அதிகாரத்தை மறையோதி தொடங்க அரசுக்கு பரிந்துரைத்து அரசு சுற்றறிக்கை அனுப்ப முயற்சிப்பது. அனைத்து தமிழ் நிகழ்வுகளிலும் திருக்குறள் போற்றி பாடி, திருக்குறள் மறையோதி நிகழ்ச்சியைத் தொடங்குவதை நடைமுறையில் கொண்டுவர முயற்சிக்கப்படும்.

**10.** இதுவரை வெளிவந்துள்ள திருக்குறள் மொழிபெயர்ப்புகள்,உரைநூல்கள் மட்டுமல்லாது, திருக்குறள் சார்ந்த அனைத்து விதமான நூல்களையும் தொகுத்து "உலகத் திருக்குறள் ஆராய்ச்சி நூலகம்" ஒன்றை உருவாக்கி, உலகின் திருக்குறள் நூல் என்றால் அங்கு இருக்கும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தும் வகையில், தொழில்நுட்பம், தற்சார்பு நிலையை ஏற்படுத்தி நிறுவ முயற்சி மேற்கொள்ளப்படும்.

www.Thirukkural.ValaiTamil.com | Kural.Mutrothal@gmail.com | குறள் வழி




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

**அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 1330 திருக்குறள் இலவச மனனப் பயிற்சி**

(வெற்றிகரமாக முடிக்கும் மாணவர்களுக்குப் பயிற்சி சான்றிதழும், அரசின் முற்றோதல் திட்டத்தில் பங்கேற்க வாய்ப்பும்)

## மாவட்டப் பயிற்சியாளர்கள்

செங்கல்பட்டு



திருமதி. பி. கற்பகவள்ளி
+91 99525 73398

அரியலூர், புதுச்சேரி



திருமதி. சங்கீதா கண்ணன்
+91 78718 39331

திண்டுக்கல்



திரு. வெ.செல்வன்
+91 97884 25501

தஞ்சை



திருமதி. ச. ஆனந்தி
+91 96008 90134

காஞ்சிபுரம்



திரு. குறள் அமிழ்தன்
+91 93643 23915

காரைக்குடி



திரு. மெ.செயம்கொண்டான்
+91 9865 455036

நாமக்கல்



முனைவர். எ.திருமலை ராஜா
+91 9952 822535

செங்கல்பட்டு



திருமதி. செ.சிந்தாமணி
+91 95976 90745

அரியலூர்



திருமதி. சூரியகலா
+91 80985 79762

திண்டுக்கல்



திருமதி. பி. கௌரி பிரபாகரன்
+91 96008 90134

## ஒருங்கிணைப்பாளர்கள்

**திட்ட ஒருங்கிணைப்பு**



திரு. ச. பார்த்தசாரதி
ஆசிரியர், வலைத்தமிழ்

வலைத்தமிழ்.காம் www.ValaiTamil.com

**அரசு மற்றும் பயிற்றுநர் ஒருங்கிணைப்பு**



திரு. சி. இராஜேந்திரன், IRS (ஓய்வு),
ஒருங்கிணைப்பாளர், வள்ளுவர் குரல் குடும்பம்

வள்ளுவர் குரல் குடும்பம்

**அரசுப் பள்ளிகள் ஒருங்கிணைப்பு**



திரு. இரவி சொக்கலிங்கம்,
நிறுவனர், S2S அறக்கட்டளை

**புரவலர் ஒருங்கிணைப்பு**



திரு. கொழந்தவேல் இராமசாமி
Washington DC, USA



திரு. க.செங்குட்டுவன்
திருக்குறள் ஆர்வலர், இந்தியா



திரு. செந்தில் துரைசாமி
திருக்குறள் ஆர்வலர், Texas,USA




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

**அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 1330 திருக்குறள் இலவச மனனப் பயிற்சி**

**(வெற்றிகரமாக முடிக்கும் மாணவர்களுக்குப் பயிற்சி சான்றிதழும், அரசின் முற்றோதல் திட்டத்தில் பங்கேற்க வாய்ப்பும்)**

## தலைமைப் பயிற்சியாளர்கள்



திருக்குறள் தூயர்
**திரு. அ. கோபி சிங்**
திருக்குறள் முற்றோதல் பயிற்றகம்,
தஞ்சாவூர்
+91 88385 11065



**திரு. க. கோ. பழனி**
திருவள்ளுவர் கல்வி மன்றம்,
சென்னை
+91 98944 59052



திருக்குறள்
**திரு. க. காமராசு**
உலகத் திருக்குறள் முற்றோதல் மையம்,
திருவண்ணாமலை
+91 63802 78863



**கவிஞர் தமிழ்க்குழவி**
திருக்குறள் வாழ்வியலாக்கப் பயிற்சி மையம்,
நாகர்கோவில்
+91 9442580620



திருக்குறள் நினைவாற்றலர்
**த. தமிழ் மகிழ்நன்**
இறை திருக்குறள் பயிற்றகம்,
திருக்கழுக்குன்றம்
+91 92802 53329

**மாவட்டத்திற்கு 1000 திருக்குறள் நூல்கள் வீதம்**
**ஆண்டுக்கு 40000 திருக்குறள் நூல்களை**
**அடுத்த பத்து ஆண்டுகளுக்கு இலவசமாக வழங்குவோர்:**
**உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA**

## பயிற்சி விவரங்களுக்கு

**E-Mail:** kural.mutrothal@gmail.com
**Web:** www.Thirukkural.ValaiTamil.com
**WhatsApp:** +91 73586 44673

**முற்றோதல் முடித்தவர்கள் பதிவு செய்ய**
www.ValaiTamil.com/mutrothal-students-register.php



# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் 2024 இலக்குகள்




- மாவட்டங்களில் பயிற்சிகளை விரிவாக்குதல். மாவட்டத்திற்கு 100 மாணவர்கள் முற்றோதல் பயிற்றுவிக்கும் இலக்கை நோக்கி நகர்தல்.
- தமிழ்நாடு அளவில் 124 என்ற தற்போதைய எண்ணிக்கையை குறைந்தது 1000 ஆக உயர்த்துதல்.
- குறள் வழி இதழை நிலைநிறுத்தி, பதிவு செய்தல்.
- மாவட்ட அளவில் புரவலர், பயிற்சியாளரை விரிவாக்குதல்.
- தொய்வு உள்ள சில மாவட்டங்களில் கவனம் செலுத்தி பலப்படுத்துதல்.
- முற்றோதல் ஆசிரியர் பயிற்சிக் கட்டமைப்பை உருவாக்குதல், பயிற்சியை தரப்படுத்தல் .
- 25 ஆண்டுகால 1200+ முற்றோதல் முடித்தவர்களை தொகுத்து மாவட்டம், பயிற்சியாளர், நாடு வாரியாக இணையத்தில் வெளியிடுதல்.
- முற்றோதல் முடித்தவர்களுக்கு அதிக வாய்ப்புகளை ஏற்படுத்தி முன்னுரிமை அளித்தல்.
- மாவட்ட அளவில் 2024 இறுதியில் திருவள்ளுவர் நாளில் மாவட்ட அளவில் குழுவாக முற்றோதல் செய்யவைத்தல்.
- திருக்குறள் ஆளுமைகளைத் தொகுத்து வெளியிடுதல்.
- 25 ஆண்டுகளாக முடித்தவர்களுக்கு முற்றோதல் இளநிலை சான்றிதழ் வழங்குதல்.
- முற்றோதல் – முதுநிலை நேர்முகத் தேர்வுக்கு பாடத்திட்டம் வரையறை செய்து பயிற்சிக் கையேடு வெளியிடுதல்.
- மாவட்ட அளவில் திருக்குறள் சார்ந்த ஆளுமைகள், ஆர்வலர்களை மாவட்டக் குழுவில் சேர்த்தல். அனைவரும் ஒருங்கிணைந்து
- குழுவாக கைகோர்த்து செயல்படுதல்.
- உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், தமிழிருக்கைக் குழுவுடன் இணைந்து 80000 திருக்குறள் நூல்களை அரசுப்பள்ளி மாணவர்களுக்கு கொண்டுசேர்த்து பயிற்சியை வழங்குதல்.




# திருக்குறள் தற்சார்பு : எங்கள் மாவட்டம்–எங்கள் பொறுப்பு

எங்கள் மாவட்ட மாணவர்களுக்கு, எங்கள் மாவட்டத்தில் படித்த ஒருவருக்கு வேலைவாய்ப்பை ஏற்படுத்தி பயிற்சியாளராக்கி, எங்கள் மாவட்டத்தில் அறம்சார் தொழில் செய்பவர்களைப் புரவலர்களாகக் கொண்டு, எங்கள் மாவட்ட வெளிநாடுவாழ் தமிழர்களின் துணையோடு திருக்குறள் முற்றோதல் பயிற்சியை வழங்கி, உயர்நெறியுடன் கூடிய மாணவர்களை உருவாக்குவோம். திருக்குறள் முற்றோதல் முடித்த மாணவர்களாக ஆண்டுக்கு நூறுபேரை உருவாக்கி எங்கள் மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து தமிழ்நாடு அரசு வழங்கும் ரூபாய் 15000 விருதையும், முற்றோதல் சாதனை சான்றிதழையும் பெற உழைப்பது நமது இலக்காகும். திருக்குறள் கற்றுத்தேர்ந்து இளநிலை மனப்பாடம், முதுநிலை பொருள் உணர்தல் என்று இருநிலைகளைக் கடந்த மாணவர்களுக்கு கல்வி, வேலைவாய்ப்பு, தொழில்வாய்ப்பு, வெளிநாட்டு வாய்ப்புகள் என்று பல்வேறு வாய்ப்புகளை ஏற்படுத்தி, திருக்குறளை முழுதும் படித்தவர்களுக்கு முன்னுரிமை வழங்குவோம். அரசு பெரும்தொகை பரிசு வழங்கினாலும் திருக்குறள் கற்க முன்வராத நிலையை மாற்றுவோம்

அன்பார்ந்த தமிழ்நாடு வாழ், வெளிநாடுவாழ் அன்பர்களே.. தமிழ்நாட்டில் ஆகச்சிறந்த ஒரு செயலை செய்யவேண்டுமானால் அது தனிமனித மாற்றம்தான். அவர்களை நற்சிந்தனையுடன், சமூகப்பொறுப்புடன் உருவாக்கிவிட்டால் அவர்கள் தாங்கள் பிறந்த ஊரை, மாவட்டத்தை, மாநிலத்தை, நாட்டை பெருமைகொள்ளச் செய்வார்கள். எனவே சமூக அக்கறைகொண்ட உங்களை உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் படித்த மாணவர்கள் உருவாக, முற்றோதல் ஆசிரியர்கள் உருவாக அன்புடன் அழைக்கிறோம்

## ஏற்கனவே பொறுப்பேற்றுள்ள புரவலர்களுக்கு நன்றி...!! நன்றி.. !!

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. செயல்பாடுகளை கண்டறிந்து அறம் சார்ந்த மனிதர்கள், நிறுவனங்கள் அந்தந்த மாவட்டத்திலிருந்து அவர்கள் சார்ந்த மாவட்டத்தின் புரவலர் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்துகிறோம். மாணவர்களுக்கு சான்றிதழ் வழங்குதல், பரிசளித்தல், பகுதிநேர, முழுநேர திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர்களுக்கு ஊக்கத்தொகையை நேரடியாக வழங்குதல் உள்ளிட்டவற்றிற்கு அந்தந்த மாவட்டத்தை சார்ந்தவர்கள் பொறுப்பேற்றுக்கொள்ளுங்கள்.

**Mayiladuthurai**
**மயிலாடுதுறை**





திரு. ஜெனிபர் பவுள்ராஜ்

**Chengalpattu**
**செங்கல்பட்டு**



திரு. மணி பெரியகருப்பன்,
ஓகாயோ , அமெரிக்கா

**Salem**
**சேலம்**



முனைவர். தங்கராசு பெரியசாமி

**Karur**
**கரூர்**



திரு. க. செங்குட்டுவன்,
தாளாளர்
Valluvar Science & Management College

**Thiruvarur**
**திருவாரூர்**



திரு. இளங்கோ,
சிங்கப்பூர்

**Pondicherry**
**புதுச்சேரி**



முனைவர். வி. முத்து
தலைவர்,
புதுவைத் தமிழ்ச்சங்கம்

**Dindigul**
**திண்டுக்கல்**



திரு. பாஸ்கர் குமரேசன்,
வெர்சீனியா, அமெரிக்கா

**Thanjavur**
**தஞ்சாவூர்**



திரு. வீ. இளவழுதி,
வெர்சீனியா, அமெரிக்கா

**பிற தேவைகள் உள்ள மாவட்டங்கள்:** அரியலூர், ஈரோடு, உதகமண்டலம், கடலூர், கள்ளக்குறிச்சி, காஞ்சிபுரம், கிருஷ்ணகிரி, கோயம்புத்தூர், சிவகங்கை, செங்கல்பட்டு, சென்னை, தர்மபுரி, திருச்சி, திருநெல்வேலி, திருப்பத்தூர், திருப்பூர், திருவண்ணாமலை, திருவள்ளூர், தூத்துக்குடி, தென்காசி, தேனி, நாகப்பட்டினம், நாகர்கோயில், புதுக்கோட்டை, பெரம்பலூர், மதுரை, ராணிப்பேட்டை, ராமநாதபுரம், விருதுநகர், விழுப்புரம், வேலூர்

# மாவட்டத் திருக்குறள் செயல்பாடுகள்

## அரியலூர் மாவட்டம்




அரியலூர் மாவட்டம் செந்துறை வட்டம் இலங்கைச்சேரி அரசு தொடக்கப் பள்ளி மாணவி சன்விகா. இரண்டாம் வகுப்பு படிக்கிறார். நம் திருக்குறள் மாணவி.

9.2.2024 அன்று மாண்புமிகு அமைச்சர் அவர்கள் புதிதாகக் கட்டப்பட்டுள்ள பள்ளியின் திறப்பு விழாவிற்கு வருகை தந்துள்ளார்.

அப்போது மாணவி திருக்குறள் கூறியுள்ளார். நான் முதல் வார்த்தை சொல்கிறேன், நீங்கள் குறள் சொல்லுங்கள் என்று அமைச்சர் கூறவும் மாணவியும் சரியாகக் கூறியுள்ளார். பச்சை மையால் கையெழுத்து போடும் உயர்ந்த பதவிக்கு நீங்கள் வரவேண்டும் என மாணவியை வாழ்த்தியுள்ளார்.



## மதுரை மாவட்டம்

இவர்களின் தந்தையார் உயர் வள்ளுவம் வகுப்பு மாணவர்

இவர்களுக்கு திருக்குறள் மனனப் பயிற்சி அளித்தவர் இவர்களது தந்தையார் சிவராமலிங்கம். குறள் கற்க மேலும் ஒரு உந்து சக்தி இலங்கை ஜெயராஜ் ஐயாவின் உயர்வள்ளுவம் வகுப்புகள்.

இவர்களை மேலும் மெருகூட்டி தேர்வுக்கு தயார் செய்தவர் திருக்குறள் முற்றோதல் பயிற்சி ஆசிரியர் திரு. கோபி சிங் தஞ்சாவூர்

சிறுமியர் இருவர், பெற்றோர், பயிற்சி ஆசிரியர் கோபி சிங் என அனைவருக்கும் வாழ்த்துகள்

நன்றி: தினமணி

## திருக்குறள் சகோதரிகள்..

உலகில் வாசிப்பு பழக்கம் குறைந்து, பெரும்பாலானோர் கைப்பேசியில் மூழ்கிக் கிடைக்கும்போது, 1330 திருக்குறள்களை மனப்பாடமாக ஒப்புவித்து, தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின் ரூ.15 ஆயிரம் பரிசுத் தொகையைப் பெற்றுள்ளனர் சகோதரிகள் அன்பரசி, அஞ்சலிதேவி.

மதுரையை அடுத்த மேலூர் அருகேயுள்ள உறங்கான்பட்டியைச் சேர்ந்த ஆ.சிவராமலிங்கம்— சி.நிர்மலா தம்பதியின் மகள்கள்தான் இவர்கள். உறங்கான்பட்டியில் 'திருக்குறள் சகோதரிகள் வீடு எது' என்று யாரை கேட்டால் போதும், வழியைச் சொல்லிவிடும் அளவுக்குப் பிரபலம்.

பதிமூன்று வயதான அன்பரசி அரசு மேல் நிலைப் பள்ளியில் எட்டாம் வகுப்பும், பதினோரு வயதாகும் அஞ்சலிதேவி ஆறாம் வகுப்பிலும் படித்து வருகிறாா்.

அவர்களிடம் பேசியபோது:

"சிறு வயது முதலே மூதுரை, நல்வழி, ஆத்திச் சூடி, கந்தர் அனுபூதி, அபிராமி அந்தாதி, திருப்பாவை, திருவெம்பாவை, திருப்பள்ளி எழுச்சி, அபசரரமண மாலை, வாரணம் ஆயிரம் உள்ளிட்ட பாடல்களை எனது தந்தை சொல்லிக் கொடுத்தார். அருணகிரிநாதர்



பாடிய 'முத்தைத்தரு பத்தித் திருநகை அத்திக்கிறை சக்திச் சரவண முத்திக்கொரு வித்துக்குருபர எனவோதும்.. என்ற பாடலையும் மனப்பாடமாகப் பிழை இல்லாமல் சொல்லவைத்தார். திருக்குறள், அதன் பொருளையும், அவ்வையாரின் நல்வழி வெண்பாக்களைப் பொருளுடன் சமூக வலைதளங்களில் பதிவிட்டு வருகிறோம்.

ஒவ்வொரு ஆண்டும் நவம்பர் டிசம்பர் மாதங்களில் தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறை மாவட்ட அளவில் நடத்தும் 1,330 திருக்குறள்களை ஒப்புவிக்கும் போட்டியில்,

மதுரை மாவட்டத்தில் ஐந்து மாணவிகள் கலந்து கொண்டோம். நாங்கள் இருவர் தான் 1,330 திருக்குறள்களைச் சொல்லி முடித்தோம். அனைத்துத் திருக்குறள்களை ஒப்புவிக்க இரண்டரை மணி நேரம் பிடித்தது. நடுவில் தண்ணீர் குடிக்க அனுமதி உண்டு.

இலங்கை ஜெயராஜின் திருக்குறள் உரையை 'யூடியூப்' வாயிலாக, தினமும் கேட்டபோது, 'ஆன்மிகமும் அறமும் இல்லாத கல்வியால் செல்வம் சேரலாம். ஆனால், நிறைவான வாழ்க்கை அமையாது' என்பதை புரிந்து கொண்டோம். இப்படி பல ஆன்மிக நூல்களை மனப்பாடம் செய்தோம்.

கோயில்களில் நடைபெற்ற திருப்பாவை, திருவெம்பாவை போட்டிகளில் பங்கேற்று பரிசுகளைப் பெற்றது ஊக்கமடைய செய்தது. மேடைகளில் சமயச் சொற்பொழிவு நிகழ்த்த பயிற்சி பெற்று வருகிறோம்" என்றார்.

–பிஸ்மி பரிணாமன்

# மயிலாடுதுறை மாவட்டம்

## தமிழ்நாட்டில் திருக்குறளுக்கான மூன்று அடையாளங்கள்



1. கன்னியாகுமரி (திருவள்ளுவர் சிலை)



2. சென்னை வள்ளுவர் கோட்டம் (நினைவகம்)



3. மயிலாடுதுறை உலகத் திருக்குறள் ஆராய்ச்சி நூலகம் (திருக்குறள் அறிவு-ஆய்வு மையம்)

மயிலாடுதுறை மாவட்டத்தின் பெருமையாக உலகத் திருக்குறள் ஆராய்ச்சி நூலகம் *International Thirukkural Research Library* மயிலாடுதுறையில் அமைக்கவேண்டியதன் முக்கியத்துவத்தை வலியுறுத்தி கடந்த ஞாயிற்றுக்கிழமை நேரில் கலந்துகொண்ட மயிலாடுதுறை திருக்குறள் பேரவைக் கூட்டத்தில் கோரிக்கை வைத்தேன். இந்நிகழ்ச்சியில் மயிலாடுதுறைத் திருக்குறள் பேரவையின் தலைவர் முனைவர்.சி.சிவசங்கரன், மயிலாடுதுறை மாவட்டத் தமிழ்ச்சங்கத்தின் நிறுவனத் தலைவர் திரு. ஜெனிஃபர் பவுல்ராஜ், ஏ.வி.சி. கல்லூரி பேராசிரியர்கள், ஆசிரியர்கள், அதிகாரிகள், தமிழார்வலர்கள், திருக்குறள் தொண்டர்கள் பலரும் கலந்துகொண்டனர்.

மயிலாடுதுறையில் மிகப்பெரிய ஆராய்ச்சி நூலகம் அமைந்து, அனைத்து திருக்குறள் அமைப்புகளின், ஆளுமைகளின் உதவியுடன் உலக நாடுகளில் திருக்குறள் சார்ந்து வெளிவந்துள்ள அனைத்து திருக்குறள் சார்ந்த நூல்களையும் உள்ளடக்கிய நூலகம் (சுமார் 10000 நூல்கள்), மின்னூல்கள், காணொளிகள், ஒலித் தொகுப்புகள், திருக்குறள் கண்காட்சி, சிறிய

*அரங்கம் (100 பேர்), பெரிய அரங்கம்: (300 பேர்) என இரு அரங்கங்கள், வாகன நிறுத்தம், திருவள்ளுவர் சிலை, நேர்த்தியான வடிவமைப்பில் சுற்றுலா பயணிகளைக் கவரும் வகையில் உருவாக்கினால் தமிழுக்கும், திருக்குறளுக்கும், மாவட்டத்திற்கும், மாநிலத்திற்கும் பெருமை சேரும்.*




மயிலாடுதுறை மாவட்டத்திற்கு பெருமை சேர்க்கும் பெரும் அடையாளமாக உலகத் தமிழர்களும், தமிழ்மொழி - பிறமொழி ஆய்வாளர்களும், பன்னாட்டு ஆய்வு மாணவர்களும், உலக சிந்தனையாளர்களும், எழுத்தாளர்களும்,பொதுமக்களும் பயன்படுத்தும் வகையில் திருக்குறளின் அனைத்து அச்சு, ஒலி,ஒளி தரவுகளையும், புகைப்படங்களையும், பழமையான திருக்குறள் அடையாளங்களையும் ஒருங்கிணைத்து ஒரு முழுமையான ஆய்வு நூலகத்தை மயிலாடுதுறையில் சுற்றுலா பயணிகள் வந்து போகும் பாதையில் அமைப்பது நமது கோரிக்கையும், தொலைநோக்குத் திட்டமும் ஆகும்.

மேலும், உலகில் உள்ள திருக்குறள் அமைப்புகளின் ஆதரவையும், தமிழ்நாடு அரசு, தருமபுரம் ஆதீனம், மயிலாடுதுறைத் திருக்குறள் பேரவை, மயிலாடுதுறைத் தமிழ்ச்சங்கம் , மயிலாடுதுறையில் உள்ள பிற இலக்கிய அமைப்புகளையும் வணிகர் சங்கங்கள் உள்ளிட்ட அனைவரையும் ஒருங்கிணைத்து இதை செய்துமுடிக்க முழு திட்டம் வகுக்கப்படும்.

சென்னைக்கு வெளியே மயிலாடுதுறையில் சுற்றுலாப் பயணிகள் எண்ணிக்கை அதிகம். உலகின் பல பகுதிகளிலிருந்தும் திருக்கடையூர்- வைத்தீஸ்வரன்கோயில் , வேளாங்கண்ணி, நாகூர் மூன்றும் ஒருங்கே அமைந்துள்ள நிலையில் அதற்கு பயணிக்கும் மையமாக மயிலாடுதுறை மாவட்டம் அமைந்துள்ளது. விரைவில் இதுகுறித்து விரிவாகத் திட்டமிட கூட்டம் ஏற்பாடு செய்யப்படும், குழு அமைக்கப்படும்.

மயிலாடுதுறை-நாகப்பட்டினம் சாலையில் மிகப்பெரிய அளவில் மாவட்டத்தின் அடையாளமாக இது அமைந்தால்

1. கன்னியாகுமரி (திருவள்ளுவர் சிலை)
2. சென்னை வள்ளுவர் கோட்டம் (நினைவகம்)
3. மயிலாடுதுறை உலகத் திருக்குறள் ஆராய்ச்சி நூலகம் (திருக்குறள் அறிவு-ஆய்வு மையம்)

இந்த வரிசையில் மூன்றாவதாக உலகத் தமிழர்களை மயிலாடுதுறை நோக்கி ஈர்க்கும். ஆண்டுக்கு ஒரு கோடி பேர் வந்துசெல்லும் இடமாக இதை மாற்றமுடியும். மயிலாடுதுறை மாவட்டத்தின் வருவாய் பெருகும். முக்கியத்துவம் கூடும்..

இந்த முக்கியத்துவம் வாய்ந்த அறிவுசார் அறிவிப்பை எழுத்தாளுமை கல்கி, சிந்தனையாளர் டாக்டர் எம்.ஏ.எஸ்.உதயமூர்த்தி, அறிவுக்களஞ்சியம் பேராசிரியர் க.அன்பழங்கன், பல ஐ.ஏ.எஸ். அதிகாரிகள், எழுத்தாளர்கள், சிந்தனையாளர்கள், சாதனையாளர்கள் படித்த மயிலாடுதுறை முனிசிபல் பள்ளியிலில் நடத்த கூட்டத்தில் அவர்கள் ஆசிகளோடு முதல் அறிவிப்பை செய்தது இது விரைவில் நடைமுறைக்கு வரும் என்ற

நம்பிக்கையைத் தருகிறது. இதற்காக மயிலாடுதுறை மாவட்டத்திலிருந்து சென்னையிலும், பிற மாநிலங்களிலும், பிற நாடுகளிலும் உயர் பொறுப்புகளில் உள்ளவர்களை இணைக்க குழு அமைக்கப்படும். மாண்புமிகு முதல்வர் அவர்களையும், தருமபுரம் ஆதீனம் அவர்களையும் நேரில் சந்தித்து இத்திட்டம் குறித்தும் அரசுக்கு கோரிக்கை வைக்கப்படும்.

*வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி*
*ஒருங்கிணைப்பாளர், உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்,*

*****

# திருவண்ணாமலை வட்டம்

இடப்பாளையம் ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி

திருவண்ணாமலையில் 10 பள்ளிகள் தலைமை ஆசிரியர்களை அழைத்து திருக்குறள் புத்தகங்கள் வழங்கப்பட்டன






17-03-2024 வேட்டவலம் வள்ளலார் திருச்சபையில் 90 பிள்ளைகளைக் கொண்டு திருக்குறள் முற்றோதல் வகுப்பு தொடங்கப்பட்டது



திருவண்ணாமலை மாவட்டம் புதுப்பாளையம் ஒன்றியம் படி அக்ரஹாரம் பள்ளியில் திருக்குறள் வகுப்பு தொடக்கம்



திருவண்ணாமலை மாவட்டம் ஜவ்வாது மலை குரியானூர் தொடக்கப்பள்ளியில் வட்டார கல்வி அலுவலர் முன்னிலையில் திருக்குறள் வகுப்பு தொடங்கப்பட்டது அந்த பள்ளியில் 500 முடித்த இரண்டு குழந்தைகளுக்கு பரிசு சான்றிதழ் வழங்கப்பட்டது




ஆட்சியர் பாராட்டு

திருவண்ணாமலை கன்னிகா பரமேஸ்வரி தொடக்கப்பள்ளி மாணவன் குமரவேலு தமிழ் வளர்ச்சித் துறை நடத்திய திருக்குறள் முற்றோதல் போட்டியில் தமிழக அரசின் ரூபாய் 15,000 பரிசு பெற தேர்வு செய்யப்பட்டார் குமரவேலுவையும் பயிற்சி அளித்த தலைமையாசிரியர் சைலஜாவையும் ஆட்சியர் பாஸ்கர பாண்டியன் பாராட்டினார் படத்தில் மாணவனின் தாயார் பாவலர் ப. குப்பன் உள்ளனர்.



# செங்கல்பட்டு மாவட்டம்

5.3.2024 செங்கல்பட்டு மாவட்டம், திருப்போரூர் ஒன்றியம், கண்ணகப்பட்டு நடுநிலைப்பள்ளியில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக 15 திருக்குறள் குழந்தைகளை தேர்வு செய்து அவர்களுக்கு திருக்குறள் புத்தகம் வழங்கப்பட்டது. நன்றி




# நீலகிரி மாவட்டம்

திருக்குறள் முற்றோதல் பயிற்சி, இல்லம் தேடி கல்வி மையம் சோகத்தோரை குன்னூர்



# தஞ்சாவூர் மாவட்டம்

தஞ்சாவூர் மாவட்டம் மொழையூர் ஊராட்சி ஒன்றிய நடுநிலை பள்ளி ஆண்டு விழாவில் 1330 திருக்குறளையும் மனனம் செய்த சு. சுபதர்ஷன் மானவர்க்கு ஊராட்சி தலைவர் அவர்கள் சைக்கிள் பரிசளித்தார். பயிற்சி ஆசிரியர் திரு கோபிசிங் அவர்கள்.




தஞ்சாவூர் மாவட்டம் 2023 இல் குறள் பரிசுப் பெற்றவர்கள்

1) செ.ஹர்சிதா
2) சு.அபிநயா
3) சு.தர்ஷினி
4) ச.தியா
5) சு.சுபதர்ஷினி
6) செ.கார்த்திகா
7) வெ.பி.அங்காளபரமேஸ்வரி
8) மா.ரித்திகா
9) க.சஷ்வந்த்ராஜ்
10) அ.சாதனா

இன்று 11.03.24 அன்று தஞ்சாவூர் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் குறள் பரிசு ரூ.15000/- க்கான காசோலைப் பெற்றபோது

இந்த பத்து திருக்குறட் செல்வங்களும் தஞ்சை திருக்குறள் முற்றோதல் பயிற்றக மாணவச் செல்வங்கள் என்பதில் பெருமை கொள்கிறோம்.

அன்புடன்,
திருக்குறள் தூயர் அ.கோபிசிங்.

கலைஞர் 100 1924 - 2023

தஞ்சாவூர் மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகத்தில்
**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**திரு.தீபக் ஜேக்கப் இ.ஆ.ப., அவர்கள்**
தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் 1330 திருக்குறள் ஒப்புவித்த
10 மாணவ - மாணவியர்களுக்கு காசோலை மற்றும்
சான்றிதழினை வழங்கினார்

உடன் வளர்ச்சித்துறை உதவி இயக்குநர்
திருமதி.ஜ.சபீர்பானு அவர்கள் உள்ளார்

தஞ்சாவூர் மாவட்டம்

வெளியீடு : செய்தி - மக்கள் தொடர்பு அலுவலர்

எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்!!

**பாராட்டி மகிழ்கிறோம்**

உலகப் பொதுமறையாம் திருக்குறளின் 1330 குறட்பாக்களையும்
முற்றோதல் செய்து தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சி துறையின்
பாராட்டுச் சான்றிதழ் மற்றும் திருக்குறள் பரிசுத்தொகை
ரூபாய் பதினைந்தாயிரம் பெற்று நம் பள்ளிக்கு பெருமை சேர்த்துள்ள

திருக்குறள் திலகம்
சு.அபிநயா (7 ஆம் வகுப்பு அ பிரிவு)

திருக்குறள் திலகம்
அ.சாதனா (7 ஆம் வகுப்பு அ பிரிவு)

அன்பு மாணவச்செல்வங்களைப் பாராட்டி மகிழ்கிறோம்!
மென்மேலும் வளர வாழ்த்தி மகிழ்கிறோம்!!
பயிற்றுவித்த திருக்குறள் தூயர் கோபிசிங் அவர்களுக்கு நன்றி!

பாராட்டி மகிழும்

தலைமை ஆசிரியர், ஆசிரிய, ஆசிரியைகள்,
பள்ளி மேலாண்மை குழு உறுப்பினர்கள்,
அரசு ஆதி திராவிடர் நல உயர்நிலைப்பள்ளி,
அரசு ஆதி திராவிடர் நல தொடக்கப்பள்ளி,
**மானோஜிப்பட்டி,**
இராமநாதபுரம் ஊராட்சி, தஞ்சாவூர் - 613 004.

# விருதுநகர் மாவட்டம்

**வைகறை முரசு**

மார்ச் - 11, 2024

### 7 வயதில் எவ்வளவு சாதனைகள்? வியப்பூட்டும் இராஜபாளையம் டி.ஏ.கே.எம். ராமம்மாள் துவக்கப் பள்ளி மாணவன் ர.அகிலேஷ்!

திருக்குறள் முற்றோதல் நிகழ்வு தமிழ் வளர்ச்சித்துறை சார்பில் கடந்த ஜன– 21 ஆம் தேதியன்று நடைபெற்றது. அதற்கான பரிசு வழங்கும் நிகழ்வு கடந்த பிப் – 3 ஆம் தேதியன்று திருக்குறள் மாணவர் மாநாடு விழாவில் நடைபெற்றது. படத்தில் திருக்குறள் முற்றோதலில் முதல் பரிசு பெற்ற மாணவன் ர.அகிலேஷ்–க்கு தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை அமைச்சர் மு.பெ. சாமிநாதன் முதலமைச்சர் விருதுக்கான ரூ.15000ஐ வழங்கிய காட்சி. உடன் விருதுநகர் மாவட்ட ஆட்சியர் வீ.ப.ஜெயசீலன் மற்றும் அதிகாரிகள் உள்ளனர்.

இராஜபாளையம் வேட்டைப் பெருமாள் கோவில் அருகே வசித்து வரும் செ.ரவிச்சந்திரன் – ர. செல்வ லட்சுமி தம்பதியரின் அரும் புதல்வன் ர. அகிலேஷ். இவர் இராஜபாளையம் அரசு உதவி பெறும் பள்ளியான டி.ஏ.கே.எம். ராமம்மாள் துவக்கப் பள்ளியில் 2 ஆம் வகுப்பு பயின்று வருகிறார். திருக்குறள் மீது பற்றுக் கொண்ட அகிலேஷ் குடும்பத்தினர் சிறு வயது முதலே மாணவனுக்கு திருகுறள் கற்றுக் கொடுத்து வந்துள்ளனர்.

மாணவர் அகிலேஷ் தமிழ்நாடு அரசு சார்பில் நடைபெற்ற போட்டி, பள்ளிகளுக்கு இடைமிலான போட்டிகள் மற்றும் பல்வேறு அமைப்புகள் சார்பில் நடைபெற்ற போட்டிகளில் தாம் பெற்ற விருதுகளுடன் எடுத்துக் கொண்ட படம்.

மாணவர் அகிலேஷும் குறள் கற்றுக் கொள்வதில் ஆர்வம் மிக்கவராக இருந்த காரணத்தால் மிகக் குறுகிய காலத்திலேயே 1330 குறளினையும் மனப்பாடமாகச் கூறும் திறன் பெற்றவரானார்.

மாணவனது ஆர்வமறிந்த அவரது பள்ளி ஆசிரியர்களும், பள்ளி நிர்வாகத்தினரும் அவரை மேலும் ஊக்கப் படுத்தி பல்வேறு போட்டிகளில் கலந்து கொள்ளும் வாய்ப்பை நல்கினர். அகிலேஷ் தாம் கலந்து கொண்ட அனைத்துப் போட்டிகளிலும் பல்வேறு பரிசுகளையும், பதக்கங்களையும், சான்றிதழ்களையும், பட்டங்களையும் விருதுகளாக வாங்கிக் குவித்துள்ளார்.

இப்பகுதியில் உள்ள தமிழ் அமைப்புகளும், தன்னார்வலர்களும் மாணவன் அகிலேஷ்–ஐ வாழ்த்துவதோடு, அவரது திறமையை மென்மேலும் வளர்த்திட ஏதேனும் ஒரு விதத்தில் தங்களால் ஆன உதவியைச் செய்திட முன் வர வேண்டும் நம்முடைய அவா.

# திருச்சி மாவட்டம்



## திருக்குறள் திருமூலநாதன் அறக்கட்டளை நடத்தும் 27ஆம் ஆண்டுத் திருக்குறள் திருவிழா

### மொத்தப் பரிசுத்தொகை ரூ.1,30,000/-

(இப்போட்டி தமிழ்நாடு முழுமையுமுள்ள பள்ளி மாணவர்க்கானது)

வணக்கம். 01.05.2024 அன்று திருச்சிராப்பள்ளியில் திருக்குறள் திருமூலநாதன் அறக்கட்டளையின் சார்பில் 27 ஆம் ஆண்டுக்கான திருக்குறள் ஒப்பித்தல் போட்டி நடைபெறவுள்ளது. நன்கொடை ஏதுமின்றி அனைத்துச் செலவுகளையும் இவ்வறக்கட்டளையின் தலைவரே வழங்கிவருகின்றார். **எமது அமைப்பின்மூலம் கடந்த 52 ஆண்டுகளாக நீதிநூல்களைக் கட்டணமின்றிக் கற்பித்து வருகின்றோம். இணையவழியிலும் வகுப்புகள் நடைபெறுகின்றன.**

**அறக்கட்டளையின் நோக்கங்கள்:** எதிர்வரும் காலங்களில் திருக்குறள் சமுதாயம் மலர, குழந்தைப் பருவத்திலேயே அவர்கள் நெஞ்சில் 1330 குறட்பாக்களும் விதைக்கப்பட வேண்டும் என்ற உயரிய குறிக்கோளை அடிப்படையாகவைத்தே எமது அறக்கட்டளை தொடங்கப்பட்டது. தமிழர்கள் அனைவரும் நேர்மை, நாணயம் ஆகியவற்றை உயிர்மூச்சாகக் கொள்ளவேண்டும் என்பதும் மொழிப்பற்றும் நாட்டுப்பற்றும் கொண்டவராக விளங்கவேண்டும் என்பதும் எம் உயரிய நோக்கங்களாகும். அதற்காக எமது அறக்கட்டளை மூலம், திருக்குறள் முழுமையும் மனனம் செய்யும் மாணவ, மாணவியர்க்குத் திருக்குறள் திருவருட்செல்வி / செல்வன் என்ற விருது வழங்கப்படும். அத்துடன்,

**1330 குறட்பாக்களையும் ஒரேமுறையில் முழுமையாகப் பிழையின்றி ஒப்பிக்கும் மாணாக்கருக்கு ரூ.2000/-மும் வழங்கப்படும் : 60x2,000 = 1,20,000/-**

மேலும், 'குறள்வழியே எம் வழி' என்னும் தலைப்பினை அடிப்படையாகக் கொண்ட வேறு தலைப்புகளில் திருக்குறள் புரிந்துணர்வுப் பேச்சுப்போட்டி ஒன்று இவ்வாண்டு முதலாகத் தொடங்கப்படுகின்றது. 1998 முதல் 2023 முடிய எங்களிடம் பரிசுபெற்றுத் தற்போது 10,11,12ஆம் வகுப்புகளில் பயிலும் மாணாக்கர் இப்போட்டியில் பங்குபெறத் தகுதியுடையோராவர். நாங்கள் தரும் தலைப்பில், ஐந்து மணித்துளிகள் பேசவேண்டும். போட்டி நடைபெறுவதற்கு 10 மணித்துளிகள் முன்பாகத் திருக்குறள் சார்ந்த தலைப்பு தரப்படும். **10x1,000 = 10,000/-**

**திருக்குறள் வழி வாழ்வாங்கு வாழ்ந்துவரும் ஒருவர்க்குத் திருக்குறள்வழிச் சீலர்' என்ற விருதுடன் உரூபா 10,000 மும் வழங்கப்படும்.**

தகுதியுடைய மாணவர்கள் 01.03.2024முதல் 15.04.2024க்குள் கீழ்க்காணும் இணையத்தளத்திலுள்ள விண்ணப்பப் படிவத்தினைப் பதிவிறக்கம்செய்து நிறைவுசெய்த விண்ணப்பத்தை எம் மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்ப வேண்டும் (புலன் (WhatsApp) எண்ணைத் தவறாது குறிப்பிட வேண்டும்). நுழைவுக்கட்டணம் இல்லை. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது எமது (நடுவர்களுக்கு மதிப்பூதியம் உண்டு).

**பெற்றோர்கட்கு ஒரு வேண்டுகோள் தாங்கள் எங்கட்குச் செய்ய வேண்டிய உதவி, அறிவார்ந்த தங்கள் பிள்ளைகளைத் திருக்குறள் படிக்கச் செய்வதே! 'நன்கொடை' என்ற உதவியன்று!**

**நேர்மையும் நாணயமும் பெருகட்டும்!!**
**தனிமனிதஒழுக்கம் தழைத்தோங்கட்டும்!!**
**ஊழலும் கையூட்டும் வன்முறையும் ஒழியட்டும்!!**
**எங்கும் அறவாழ்வு உயர்ந்தோங்கட்டும்!!**

எங்களைப் போலவே நன்கொடை, நுழைவுக் கட்டணம் ஏதுமின்றி நடத்தப்படும் தமிழ் இயக்கத்தினர் எங்களைத் தொடர்புகொள்க. உங்களைப் பாராட்டுகிறோம்.

தொடர்பு முகவரி: **பூவை.பி.தயாபரன்**

நிறுவுநர் & தலைவர், 25, திருக்குறள் தெரு, புள்ளம்பாடி - 621 711.

அலைபேசி எண்: **97865 86992**, மின்னஞ்சல்: **thirumulanathan@gmail.com, dhayaparan.p@gmail.com**

போட்டி நிகழ்வை நேரலையாகக் காண: **www.ValaiTamil.TV**

பதிவு செய்ய : **https://www.globaltamilevents.com/thirumoolanathan-tview1245.html**

Scan To Register 

இங்ஙனம்
அறக்கட்டளையினர்

## மே 1–இல் திருக்குறள் ஒப்பித்தல் போட்டி: பள்ளி மாணவர்கள் பங்கேற்க அழைப்பு

தினமணி 13.03.2024

**திருச்சி, மார்ச் 12:** திருக்குறள் திருமூலநாதன் அறக்கட்டளை சார்பில் 27–ஆவது ஆண்டு திருக்குறள் ஒப்பித்தல் போட்டி (திருக்குறள் திருவிழா) திருச்சியில் மே 1–ஆம் தேதி நடைபெறவுள்ளது.

இதுதொடர்பாக அறக்கட்டளை தலைவர் பூவை பி. தயாபரன் கூறியது:

திருக்குறள் திருமூலநாதன் அறக்கட்டளை சார்பில் 27–ஆவது ஆண்டு திருக்குறள் ஒப்பித்தல் போட்டி திருச்சியில் மே 1–ஆம் தேதி நடைபெறவுள்ளது. இதில் பள்ளி மாணவ, மாணவிகள் கலந்து கொள்ளலாம்.

1,330 திருக்குறள்களையும் ஒப்பிக்கும் மாணவர்களுக்கு ரூ.2,000 ரொக்கம், திருக்குறள் செல்வன், செல்வி விருது வழங்கப்படும். 60 பேருக்கு பரிசுகள் வழங்கப்படும்.

விருப்பமுள்ள மாணவர்கள் ஏப்.15–ஆம் தேதிக்குள் thirumulanathan@gmail.com என்ற மின்னஞ்சலில் முன்பதிவு செய்ய வேண்டும். நுழைவுக் கட்டணம் இல்லை. கூடுதல் விவரங்களுக்கு 97865-86992 என்ற கைப்பேசி எண்ணில் தொடர்பு கொள்ளலாம் என்றார் அவர்.

# திருவாரூர் மாவட்டம்



திருவாரூர் அருகே அரசு பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகம் வழங்கப்பட்டது.

## பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகம்

**திருவாரூர்:** திருவாரூர் அருகே எருக்காட்டூர் அரசு பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகம் வழங்கப்பட்டது. உலகத் தமிழ் வளர்ச்சி தலைவர் விஜய் ஜானகிராமன், உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்க ஒருங்கிணைப்பாளர் சென்னை பார்த்தசாரதி, திருவாரூர் ஒருங்கிணைப்பாளர் இளங்கோவன் ஆகியோர் மாணவ, மாணவிகளுக்கு திருக்குறள் புத்தகங்களை வழங்கினர். பள்ளியில் 6,7,8 வகுப்பு பயிலும் மாணவர்களுக்கு இப்புத்தகம் வழங்கப்பட்டுள்ளது. அதிக எண்ணிக்கையில் திருக்குறளை படித்து ஒப்புவிக்கும் மாணவ, மாணவிகளுக்கு பரிசும் அறிவிக்கப்பட்டுள்ளது என ஆசிரியை புவனா தெரிவித்தார்.

# திண்டுக்கல் மாவட்டம்

திண்டுக்கல் மாவட்டத்தில் தமிழ் வளர்ச்சி துறையில் நடைபெற்ற திருக்குறள் ஒப்புவித்தல் போட்டியில் 1330 திருக்குறளைவும் ஒப்பவித்து மாவட்டத்தில் முதல் மாணவியாக பரிசுக்கு தேர்வு செய்யப்பட்ட பி. பவிஷா விற்கு அமைச்சர் அவர்களின் கையால் தமிழக அரசின் பாராட்டு சான்றிதழ் மற்றும் 15,000 ரூபாய் பரிசு தொகையை வழங்கினார்





திருப்பதி அருள்நெறி மேல்நிலைப்பள்ளி கள்ளிமந்தயம்.

# பெரம்பலூர் மாவட்டம்

மார்ச்: 15-3-2024 நமது பெரம்பலூர் 24

## கொளத்தூர் பகுதி நேர நூலகம் சார்பில் திருக்குறள் ஒப்புவித்தல் நிகழ்ச்சி

**கொளத்தூர் பகுதி நேர நூலகம் சார்பில் திருக்குறள் ஒப்பிவித்தல் நிகழ்ச்சி நடத்தி அதிக குறள்களை ஒப்பித்த மாணவர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது.**

பெரம்பலூர் மாவட்ட நூலக ஆணை குழுவின் கீழ் இயங்கும் கொளக்காநத்தம் ஊர்ப்புற நூலகத்துடன் இணைந்த கொளத்தூர் பகுதி நேர நூலக வாசகர் வட்டம் சார்பாக திருக்குறள் ஒப்பி வித்தல் நிகழ்ச்சி நடைபெற்றது. இந்நிகழ்விற்கு கொளக்காநத்தம் ஊர்ப்புற நூலகர் இராஜா தலைமை வகித்தார்.

சில்லக்குடி அரசு உயர்நிலைப்பள்ளி பட்டதாரி ஆசிரியர் ராஜேந்திரன் மற்றும் நூலக ஆர்வலர் சக்கரபாணி ஆகியோர் முன்னிலை வைத்தனர்.

இதில் சிறப்பு விருந்தினராக அல்லிநகரம்சினி அறிவுமறை கலந்துகொண்டு நிகழ்வினை தொடங்கி வைத்தார்.

இந்நிகழ்வில் சமூக ஆர்வலர் அய்யா கதிரவன் அவர்கள் கலந்துக்கொண்டு திருக்குறள் பற்றி மாணவர்களுக்கு எடுத்துக்கூறினார்.

1330 திருக்குறள்களையும் படித்து ஒப்புவித்தால் தமிழ் வளர்ச்சித் துறை சார்பில் ஆண்டுதோறும் நடைபெறும் திருக்குறள் ஒப்பித்தல் போட்டியில் ரூபாய் 25000 பரிசினை வெல்ல Ads மாணவர்களுக்கு தெரிவிக்கப்பட்டது.

மேலும் இந்த நிகழ்வில் நூலக வாசகர்கள் மற்றும் பள்ளி மாணவர்கள் திருக்குறள் ஒப்பிவித்தனர். அதிக திருக்குறளை ஒப்பிவித்த மாணவர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டது.

முன்னதாக நூலக பணியாளர் சங்கீதா அனைவரையும் வரவேற்றார்.

நிறைவாக நூலக வாசகர் நன்றியுரை வழங்கினார்.

# கன்னியாகுமரி மாவட்டம்

குறளகம் சார்பில் இருளப்பபுரம் அரசு பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன



# காஞ்சிபுரம் மாவட்டம்

காஞ்சிபுரம் மாவட்டம் வாலாஜாபாத் ஒன்றியம் நெய்குப்பம் தொடக்கப் பள்ளியில் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக 15 திருக்குறள் குழந்தைகள் (4&5 வகுப்பு குழந்தைகள்) திருக்குறள் பயிற்சி தொடங்கப்பட்டது.



# வேலூர் மாவட்டம்

28/03/24, வேலூர்

**உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சென்னை மற்றும் திருவள்ளுவர் சேவா சங்கம் இணைந்து மாணவர்களுக்கு இலவச திருக்குறள் நூல் வழங்கும் விழா.**

வேலூர் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சென்னை மற்றம் திருவள்ளுவர் சேவா சங்கம் இணைந்து அரசு ஆதி திராவிடர் மேனிலைப் பள்ளியில் அலமேலு மங்காபுரம் மாணவ மாணவிகளுக்கு இலவசமமாக 50 மாணவர்களுக்கு திருக்குறள் நூல் வழங்கும் விழா நடை பெற்றது. தமிழ் தாய் வாழ்த்து பாடப்பட்டது, தலைமை ஆசிரியர் முனைவர் S. சாந்தி வரவேற்புரை ஆற்றினார் அவருக்கு திருக்குறள் மாமுனி முனைவர் ச.ஸ்ரீதர் சிறப்பு செய்து திருக்குறள் புத்தகம் நினைவு பரிசு வழங்கினார். நிறுவனத் தலைவர் திருக்குறள் மாமுனி முனைவர் ச. ஸ்ரீதர் தலைமை உரையாற்றி மாணவர்களுக்கு திருக்குறள் புத்தகம் வழங்கினார். திருவள்ளுவர் விருது அ. பாஸ்கரன் சிறப்புரை வழங்குகினார். தமிழாசிரியர் A. குமார் நிகழ்ச்சியை தொகுத்து வழங்கினார். மு. நரசிம்மன் உதவி ஆய்வாளர் பணி நிறைவு கம்பன் கழகத் தலைவர் பிரம்ம ஞானசங்கம் செயலாளர் திருக்குறள் பற்றி பேசினார். தலைமை ஆசிரியர் அனைவருக்கும் சால்வை அணிவித்து சிறப்பு செய்தார். தமிழ் ஆசிரியர்களுக்கு திருக்குறள் நினைவு பரிசு வழங்கப்பட்டது. நிகழ்ச்சியில் புகைப்படம் கலைஞர் வெங்கடேசன் கலந்து கொண்டனர் திருவள்ளுவர் விருது த. அண்ணாமலை நன்றி கூறினார். நாட்டுப் பண்ணுடன் விழா நிறைவு பெற்றது.





வேலூர் அடுத்த அலமேலுமங்காபுரம் அரசினர் ஆதிதிராவிடர் நல மேல் நிலைப் பள்ளி மாணவர்களுக்கு உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் மற்றும் திருவள்ளுவர் சேவா சங்கம் சார்பில் இலவசமாக திருக்குறள் புத்தகங்கள் வழங்கப்பட்டன. இதில், பள்ளி தலைமை ஆசிரியர் சாந்தி, திருக்குறள் சேவா சங்க நிறுவன தலைவர் ஸ்ரீதர், பாஸ்கரன், ஓய்வு பெற்ற உதவி ஆய்வாளர் நரசிம்மன் உள்ளிட்டோர் பங்கேற்றனர்.

# கரூர் மாவட்டம்

கரூர் மாவட்டம் வாங்கல் பெண்கள் மேனிலைப் பள்ளி புதிய நூலகத்திற்கு முன் வள்ளுவர் சிலை நிறுவப்பட்டுள்ளது.



# திருக்குறள் செய்திகள்

உலக மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்புத் தொகுப்பு திட்டக்குழுவின் அறிக்கையாக வெளியிடப்பட்ட Thirukural Translations in World Languages ஆங்கில நூல் குறித்த தமிழ் இந்து நேர்காணல் இன்றைய செய்தித்தாளில்.

நன்றி: தமிழ் இந்து

இக்குழுவின் நோக்கம் எத்தனை மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது என்று ஆராய்வதோடு நின்றுவிடவில்லை. "திருக்குறள் 2030" என்ற அடுத்தக்கட்ட தொடர்ச்சியான திட்டத்தை முன்னெடுத்து இன்னும் மொழிபெயர்க்கவேண்டிய உலக அலுவல் மொழிகள் 158-ல் மொழிபெயர்ப்புகளை கொண்டுவருவதற்கு உலகத் தமிழ்ச்சங்கங்கள், வெளிநாட்டுத் தமிழறிஞர்கள், வெளிநாட்டு மொழிபெயர்ப்பாளர்கள், தமிழ் வளர்ச்சித்துறை, செம்மொழி ஆய்வு நிறுவனம் ஆகிய அனைவரும் கைகோர்த்து இலக்கை எட்ட முடியும்.

தமிழ், திருக்குறளின் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இத்திட்டத்தில் பங்களிக்க புலம்பெயர் தமிழ்ச்சமூகத்தை திட்டக்குழுவின் சார்பாக அன்புடன் அழைக்கிறோம்.

நூலைப் பெற: https://www.eStore.ValaiTamil.com

இந்து தமிழ் திசை | 12 | CHENNAI | ஞாயிறு, மார்ச் 24, 2024

கருத்துப் பேழை

# உலக அமைதிக்கு வழிசமைக்கும் பேரிலக்கியம் திருக்குறள்

திருக்குறள் மொழிபெயர்ப்பு என்பது ஒரு தனித் துறையாகப் பயிலப்பட வேண்டிய அளவுக்கு அதன் எல்லை விரிந்துகொண்டே செல்கிறது. திருக்குறள் மொழிபெயர்ப்புகளை ஆவணப்படுத்தும் பணியில் 2018லிருந்து ஒரு குழு ஈடுபட்டுவருகிறது. 'வலைத்தமிழ்.காம்' நிறுவனர் ச.பார்த்தசாரதி, அமெரிக்காவைச் சேர்ந்த திருக்குறள் ஆர்வலர் இளங்கோ தங்கவேல், கானுயிர் மருத்துவர் என்.வி.கே.அஷ்ரப், 'வள்ளுவர் குரல் குடும்பம்' ஒருங்கிணைப்பாளர் ராஜேந்திரன் ஐஆர்எஸ், செந்தில்குமார் துரைசாமி, அஜய்குமார் செல்வன் முதலானவர்கள் அடங்கிய அக்குழு, 'Thirukkural Translations in World Languages' என்கிற நூலை அண்மையில் வெளியிட்டுள்ளது. அதுகுறித்து பார்த்தசாரதி, அஷ்ரப், ராஜேந்திரன் ஆகியோரிடம் பேசியதிலிருந்து சில பகுதிகள்:

சந்திப்பு: ஆனந்தன் செல்லையா
தொடர்புக்கு: anandchelliah@hindutamil.co.in

ச.பார்த்தசாரதி

என்.வி.கே.அஷ்ரப்

ராஜேந்திரன்

நேர்காணல்:
ச.பார்த்தசாரதி
என்.வி.கே.அஷ்ரப்
ராஜேந்திரன்

**திருக்குறள் மொழிபெயர்ப்புகளைத் தொகுக்கும் எண்ணம் எப்படித் தோன்றியது?**

திருக்குறள் மொழிபெயர்ப்புகளுக்கான நூல்பட்டியல் வெளிவருவது புதிதல்ல. 1964இல் இருந்தே இப்பணிகள் நடைபெற்றுவந்துள்ளன. ஆனால், விரிவான அளவில் வெளியாவது இதுதான் முதல் முறை. இந்நூல் எத்தனை மொழிகளுக்குச் சென்றுள்ளது என்பது குறித்து நம்மிடம் தோராயமான தகவல்களே உள்ளன. பைபிளுக்கு அடுத்தபடியாக அதிகளவில் மொழிபெயர்க்கப்பட்ட நூல் எனவும் 100க்கும் மேற்பட்ட மொழிகளில் வந்துள்ளதாகவும் பலர் நம்புகின்றனர். இப்படிப் பொத்தாம்பொதுவாகக் கூறுவது, மொழியின் வளர்ச்சிக்கு எந்த வகையிலும் உதவாது. எனவே, திருக்குறள் மொழிபெயர்ப்புகள் குறித்துத் துல்லியமாகப் பதிவுசெய்ய வேண்டும் என நினைத்தோம்.

**இந்தத் திட்டம் எப்படிச் செயல்படுத்தப்பட்டது?**

திருக்குறள் எத்தனை மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது என்பதை அடையாளம் கண்டு, அதற்கென ஐந்தாண்டுத் திட்டம் வகுத்து, உரியவர்களை ஒருங்கிணைத்து, அனைத்து மொழிகளிலும் திருக்குறளை மொழிபெயர்த்து முடித்து, அனைவருக்கும் கிடைக்கச் செய்வதுதான் எங்களது நோக்கம். அச்சில் இல்லாமல் போன மொழிபெயர்ப்புகளை அடையாளம் கண்டு, உரிய வழிமுறைகளைப் பின்பற்றி அச்சிட்டு வழங்குவதும், அனைத்து நாடுகளில் உள்ள மொழிபெயர்ப்புகளையும் ஒரே இடத்தில் கிடைக்கச் செய்யவும் தேவையான வேலைகளைச் செய்கிறோம். மக்கள் பிற மொழியினரைச் சந்திக்கும்போது, அவர்கள் மொழியில் வெளியான திருக்குறளைப் பரிசளிப்பது, ஒரு பண்பாட்டு நடவடிக்கையாக மாறுவதற்கு விரும்புகிறோம். இது அதிகாரிகள், ஆட்சியாளர்கள், தூதரகங்கள் இடையேயும் நிலைபெறச் செய்ய முயல்கிறோம்.

**மொழிபெயர்ப்புகளை ஆவணப்படுத்துவதில் உள்ள சிரமங்கள் என்ன?**

தனிப்பட்ட நபர்கள் தம் சொந்தப் பணத்தில் திருக்குறளை மொழிபெயர்க்கும் முயற்சிகள்தாம் அதிகம். எனினும், தங்களது நூலைப் பலருக்குக் கொண்டுசேர்க்க அவர்களால் இயலாது. நூல் அவர்களிடமே தேக்கமடைந்துவிடும். இந்த மொழிபெயர்ப்பு குறித்த செய்தியை அறிவது, தொடர்ச்சியான தேடலில் ஈடுபட்டால்தான் சாத்தியம். அது குறித்த விரிவான தகவல்களைப் பெறுவதும் கடினமான வேலைதான். ஒரு புத்தகத்தைத் தேடிப்பெற ஆறு மாதங்கள்கூட ஆகலாம்.

எடுத்துக்காட்டாக, தந்தை மொழிபெயர்த்திருப்பார்; பிற்காலத்தில் மகனிடம்கூடப் பிரதி இருக்காது. பிஜி தீவில் பேசப்படும் மொழியில் வெளிவந்த திருக்குறள் நூலை, அங்குள்ள இந்தியத் துணைத் தூதரக அதிகாரி பெற்றுத் தந்தார்.

**திருக்குறளின் வீச்சு குறித்து நீங்கள் அறிந்துகொண்ட புதிய செய்திகள் என்ன?**

இந்தியக் குடியரசுத் தலைவர் திரௌபதி முர்மு, சந்தாலி பழங்குடி இனத்தைச் சேர்ந்தவர். சந்தாலி மொழியில்கூடத் திருக்குறள் பெயர்க்கப்பட்டுள்ளது எனக் கேள்விப்பட்டு அதைத் தேடினோம். அதற்காகப் பல மாதங்கள் காத்திருக்க வேண்டியிருந்தது. இறுதியில், தஞ்சாவூரைச் சேர்ந்த 'நெருஞ்சி' என்கிற இலக்கிய இயக்கம்தான் அதை வெளியிட்டுள்ளது என்பது தெரியவந்தது. அருள்தம்பி விரிச்சர்டு என்பவர் அதை மொழிபெயர்த்துள்ளார்.

மாஸ்கோ லெனின் நூலகத்தில் திருக்குறள் குறித்து 1,000 பக்கங்களுக்கும் மேற்பட்ட ஆவணம் ஒன்று கிடைத்தது. ரஷ்யா 'சோவியத் யூனியன்' ஆக இருந்தபோது, அங்கு திருக்குறளுக்கும், ஜெயகாந்தன் கதைகளுக்கும் தனி வாசகர் கூட்டம் இருந்துள்ளதை நாங்கள் அறிந்துகொண்டோம். லியோ டால்ஸ்டாய் காலத்திலேயே ரஷ்யர்களுக்குத் திருக்குறள் அறிமுகமாகிவிட்டது எனினும், 1970களில் தமிழகத்தின் பொதுவுடைமை இயக்கத்தினர் மூலம் இத்தகைய செழுமையான இலக்கியப் பரிமாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. தென்மேற்குப் பசிபிக் கடல் பகுதியான பபுவா நியு கினி நாட்டில் பேசப்படும் டாக் பிஸின் என்கிற மொழியில்கூடத் திருக்குறள் வெளிவந்துள்ளது.

THIRUKKURAL TRANSLATIONS IN WORLD LANGUAGES

தமிழகச் சுகாதாரத் துறைச் செயலாளர் ககன்தீப் சிங் பேடியின் தந்தை, திருக்குறளைப் பஞ்சாபியில் பெயர்த்துள்ளார்.

**தமிழ் தனித்துவம் வாய்ந்த சொற்களைக் கொண்டது. திருக்குறளில் உள்ள அத்தகைய சொற்கள், மொழிபெயர்ப்புகளில் எப்படி எதிர்கொள்ளப்படுகின்றன?**

உதாரணமாக, அறம் என்ற சொல்லுக்கு இணையான சொல், பிற மொழிகளில் இல்லை. திருக்குறளில் 'தீ' என்னும் சொல், 'நெருப்பு' என்னும் பொருளில் மட்டுமே அணுகப்படவில்லை. 'கலோரி' என்னும் பொருளில்கூடப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இத்தகைய சொற்களுக்கு, அதன் பொருளை அப்படியே கூறுவதுதான் மொழிபெயர்ப்பாளர்களுக்கு இருக்கும் ஒரே வழி. குறள்பாக்கள் சரியான பொருளில் அந்தந்த மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ளனவா என அறிந்துகொள்ளத் திறனாய்வையும் இனிமேல் செய்யவுள்ளோம்.

**எத்தனை மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதாகக் கண்டறிந்துள்ளீர்கள்?**

இதுவரை 58 மொழிகளில் திருக்குறள் பெயர்க்கப்பட்டுள்ளது. அவற்றில் இந்திய மொழிகள் 29, வெளிநாட்டு மொழிகள் 29. முதலில் மலையாளத்தில்தான் (1595ஆம் ஆண்டு) பெயர்க்கப்பட்டுள்ளது. அப்போது அது அச்சில் ஏறவில்லை; எழுதி மட்டும் வைக்கப்பட்டது. அடுத்ததாக, லத்தீன் மொழியில் திருக்குறள் வெளியானது. மலையாளத்தில் மட்டுமே 27 மொழிபெயர்ப்புகள் வந்துள்ளன.

**யுனெஸ்கோ போன்ற அமைப்புகளுக்குத் திருக்குறளைக் கொண்டுசெல்ல வேண்டும் என்று கூறியிருக்கிறீர்கள். அதன் முக்கியத்துவத்தைக் கூறுங்கள்.**

தனிமனித மனத்தில் அமைதியை உருவாக்கும் நூல், திருக்குறள். பண்பாட்டு நடவடிக்கைகளால் பல நாடுகளுடன் யுனெஸ்கோ உறவாடுகிறது. தனிமனிதனின் அமைதியே, உலக அமைதிக்கு வழிவகுக்கிறது என்பது அதன் அடிப்படைக் கொள்கை. எனவே, யுனெஸ்கோ மூலம் உலக இலக்கியமாகக் கொண்டுசெல்லப்படுவதற்குத் திருக்குறள் பொருத்தமானது. அதிலுள்ள கருத்துகளால் உலகளவில் மனிதர்களிடையே முரண்பாடுகள் மறையும் சூழல் ஏற்படுவது நல்லதுதானே? ஜியுபோப் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த பின்னர்தான், இந்நூல் தமிழகத்தைக் கடந்து கவனம் பெற்றது.

**'Thirukkural Tranlations in World Languages' நூலுக்கு வரவேற்பு எப்படி உள்ளது?**

நாங்கள் பல ஆண்டுகளாக ஆவணப்படுத்தி வரும் செய்திகளை ஒரே நூலில் அடக்குவது பெரிய சவாலாக இருந்தது. ஐநா. உறுப்பு நாடுகள், உறுப்பு அல்லாத நாடுகள் ஆகியவற்றில் எங்கெல்லாம் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது, ஒன்றுக்கு மேற்பட்ட மொழிபெயர்ப்பு வந்த மொழிகள் எவை, ஒரு மொழிபெயர்ப்புகூட வராத மொழிகள் எவை என்பது உள்ளிட்ட விவரங்கள் இதில் உள்ளன. நூல் வெளியீட்டு விழாவில் பேசிய தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநர் ந.அருள், "இது பல்கலைக்கழகம் போன்ற அமைப்புகளால் செய்யப்பட வேண்டிய அளவுக்கு மிகப் பெரிய பணி" எனப் பாராட்டினார். திருக்குறள் என்னென்ன மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ளதோ, அம்மொழிகள் பேசுவோரின் பிள்ளைகள்தாம் மொழிபெயர்ப்புகளின் தரத்தை எதிர்காலத்தில் உறுதிப்படுத்த வேண்டும்.

---

பேரவையின் 37ஆம் தமிழ் விழா
ஜூலை 4,5&6 - 2024
சமத்துவம் தமிழரின் தனித்துவம்
Federation of Tamil Sangams of North America SINCE 1988
San Antonio Tamil Sangam Estd. 1996

## வட அமெரிக்கத் தமிழ்ச்சங்கப் பேரவை

## Federation of Tamil Sangams of North America (FeTNA)

# குறள் தேனீ 2024

நாள் : ஜூலை 5 & 6, 2024
இடம் : சான் ஆண்டோனியோ, TX

## பயிற்சிப் பட்டறை 3

குறள் பட்டியல், போட்டிக்கான விதிமுறைகள் பற்றிய தகவல்களை பெற
கீழுள்ள படிவத்தை நிரப்பவும்.

http://tinyurl.com/5akf4dn6

குறள் அரசி
**சங்கீதா கண்ணன்**
நாள் : ஏப்ரல் 02-2024
நேரம் : இரவு 07.30 (மத்திய நேரம்)

மேலும் விவரங்களுக்கு
kural_theni@fetna.org
www.fetna.org

---

## ஏப்ரல் 06, 2024 - சனிக்கிழமை

காலை 08:30 மணி முதல்
இடம் : திருவள்ளுவர் அரங்கம்

**அமர்வு 1** கடவுள் வாழ்த்தும், அறன் வலியுறுத்தலும்
(காலை 8:30 - 09:45)
- மங்கல இசை
- சிறப்பு விருந்தினர்கள் வரவேற்பு
- தமிழ்த்தாய் வாழ்த்து & திருக்குறள் ஓதல்
- குத்துவிளக்கேற்றல்
- வரவேற்புரை
- தொடக்க விழா

**அமர்வு 2** சான்றாண்மை
(காலை 09:45 - 10:50)
- பேராசிரியர் சாலமன் பாப்பையா வழங்கும் திருக்குறள் சிறப்பு உரை
- அறிஞர்கள் ஆய்வுக் கட்டுரைகள் பகிர்தல் (மருத்துவர் கேசவன், மருத்துவர் சானகிராமன், மருத்துவர் சம்பந்தம், பொறியாளர் துக்காராம் அறைகள்)

தேநீர் இடைவேளை (10 நிமிடங்கள்)

**அமர்வு 3** கல்வியும், கேள்வியும்
(மதியம் 11:00 - 12:00)
- வினாடி வினா

மதிய உணவு விருந்தோம்பல் (60 நிமிடங்கள்)

**அமர்வு 4** மக்கட் பேறும், மருந்தும்
(மதியம் 01:00 - 02:10)
- குறள் இளவரசன், குறள் அரசன் பெருமைப்படுத்துதல்
- சிகாகோ தமிழ்ச் சங்கம் - பொன் பறை
- அமெரிக்கத் தமிழ்ப்பள்ளிகள் நடத்திய உலக மாணவர்கள் பங்கேற்ற திருக்குறள் ஆராய்ச்சி
- குழு நடனம்
- மரு.சொக்கலிங்கம் - சிறப்புரை வள்ளுவம் கூறும் மருத்துவம்

**அமர்வு 5** குறிப்பறிதலும், குறிப்பறிவுறுத்தலும்
(மதியம் 02:10 - 03:20)
- குற்றாலக் குறவஞ்சி - நாட்டிய நாடகம்

தேநீர் இடைவேளை (15 நிமிடங்கள்)

**அமர்வு 6** ஆள்வினையுடைமை
(மாலை 03:35 - 04:45)
- திருக்குறளில் மேலாண்மை கலந்துரையாடல்

**அமர்வு 7** சுற்றந்தழால்
(மாலை 04:45 - 05:45)
- மிசௌரி தமிழ்ச் சங்கம் - சிலம்பாட்டம்
- வலைத்தமிழ் - புத்தக வெளியீடு
- சிகாகோ தமிழ்ச் சங்கம் - சிலம்பாட்டம்
- மில்வாக்கி தமிழ்ச் சங்கம்

**அமர்வு 8** பழைமையும், பெருமையும்
(இரவு 05:45 - 07:00)
- ஜேம்ஸ் வசந்தனின் - தமிழ் ஓசை
- குழு நடனம்

இரவு உணவு விருந்தோம்பல் (60 நிமிடங்கள்)

**அமர்வு 9** புகழ்
(இரவு 08:00 - 10:00)
- குறளோடு குரல் - இன்னிசை நிகழ்ச்சி

# தஞ்சாவூர் அருகே 15 அடி உயர திருவள்ளுவர் சிலை திறப்பு

தஞ்சாவூர், மார்ச் 30: தஞ்சாவூர் அருகே புன்னைநல்லூர் மாரியம்மன் கோவில் வெள்ளாஞ்செட்டித் தெருவிலுள்ள தமிழ்த்தாய்க் கோட்டத்தில் தமிழ்த்தாய் அறக்கட்டளை சார்பில் 15 அடி உயர திருவள்ளுவர் சிலை சனிக்கிழமை காலை திறக்கப்பட்டது.

இச்சிலையை புதுவைத் தமிழ்ச் சங்கத் தலைவர் முனைவர் வி. முத்து திறந்து வைத்தார். இது குறித்து தமிழ்த்தாய் அறக்கட்டளைத் தலைவர் உடையார்கோவில் குணா தெரிவித்தது:

ஆறு அடி உயர பீடத்தில் 9 அடி உயர திருவள்ளுவர் சிலை அமைக்கப்பட்டுள்ளது. மொத்தம் 15 அடி உயரம் கொண்ட பிரம்மாண்டமான இச்சிலை 3 ஆயிரம் கிலோ எடையுடை கருங்கல்லால் செய்யப்பட்டது இது, உலகின் இரண்டாவது மிகப் பெரிய கருங்கல்லில் செய்யப்பட்ட திருவள்ளுவர் சிலையாகப் போற்றப்படுகிறது.

மேலும், திருக்குறள் முதல் அடியில் 4 சீர்களைக் குறிக்கும் வகையில் சிலையின் தலை முடி 4 முடிச்சுகளாகவும், இரண்டாவது அடியில் 3 சீர்களைக் குறிக்கும் விதமாக தாடி 3 அடுக்குகளாகவும் வடிவமைக்கப்பட்டுள்ளது. இச்சிலை கன்னியாகுமரி மாவட்டம், மயிலாடி கிருஷ்ணா சிற்பக்கூடத்தில் தயார் செய்யப்பட்டது என்றார் குணா.

இவ்விழாவில் மாரியம்மன் கோவில் ஊராட்சி மன்ற முன்னாள் தலைவர் தனசேகர், தஞ்சாவூர் கூட்டுப் பண்ணை உழவர் உற்பத்தியாளர் நிறுவனத் தலைவர் சு. கார்த்திகேயன், ஞா. கருணாகரன், முனைவர் தி. நெல்லையப்பன், வழக்குரைஞர் சீனி. சந்திரசேகர், ஆய்வாளர் இராம. சம்பந்தமூர்த்தி, பாவலர் ப.கோ. நாராயணசாமி, கவிஞர் செ.வ. மதிவாணன், பாவலர் கோ. மலர்வண்ணன், கவிஞர் பூவை சாரதி, தஞ்சாவூர் இராம. சந்திரசேகரன் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

தஞ்சாவூர் அருகே புன்னைநல்லூர் மாரியம்மன் கோவிலில் சனிக்கிழமை திறக்கப்பட்ட 15 அடி உயர திருவள்ளுவர் சிலை.

**மணி விழா:** தஞ்சாவூர் அருகே உடையார்கோவில் கிராமத்தில் தமிழ்த்தாய் அறக்கட்டளையின் நிறுவனர் - பொதுச் செயலரும், கவிஞருமான உடையார்கோவில் குணா அகவை 60 நிறைவு மணி விழா சனிக்கிழமை மாலை நடைபெற்றது.

புதுவைத் தமிழ்ச் சங்கத் தலைவர் முனைவர் வி. முத்து தலைமையில் நடைபெற்ற இவ்விழாவை இராமநாதபுரம் கம்பன் கழகத் தலைவர் மா.அ. சுந்தர்ராசன் தொடங்கி வைத்தார். தஞ்சைத் தமிழ் மன்ற நிறுவனர் இராம. வேல்முருகன், கள்ளக்குறிச்சி கல்லைத் தமிழ்ச் சங்கச் சிறப்புத் தலைவர் மா. கோமுகி மணியன், அம்மாபேட்டை உ.அ.அ. தேவர் மேல்நிலைப் பள்ளி முன்னாள் தலைமையாசிரியர் இரா. இராசாமணி, ஓய்வு பெற்ற உடற்கல்வி ஆசிரியர் இரெ. அழகேசன் ஆகியோர் வாழ்த்துரையாற்றினர்.

வெற்றித் தமிழர் பேரவை மாநிலத் துணைப் பொதுச் செயலர் இரா. செழியன், தியாகதுருகம் பாரதியார் தமிழ்ச் சங்கத் தலைவர் இரா. துரைமுருகன் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

முன்னதாக, உ. செம்மொழிச் சோழன் வரவேற்றார். நிறைவாக, உடையார்கோவில் குணா நன்றி கூறினார்.

பிப்ரவரி 2024

தமிழ் அறிஞர்கள் சந்திப்பு!

## உலக சாதனை புத்தகத்தில் 1330 குறள் வி.ஜி.சந்தோசம் வாழ்த்து!

GWR உலகச் சாதனையாளர் புத்தகத்தில், சித்திரத் தையல் பெண் கலைஞர்கள் திருவள்ளுவரின் 1330 குறள்களை, புடவையில் நெய்தும், திருவள்ளுவர் படத்தினை நூல் ஜரிகை மணிகளால் வடிவமைத்தும் சாதனை படைத்துள்ளனர். அவர்களுக்கு விஜிபி உலகத் தமிழ்ச் சங்கத்தின் தலைவர் வாழ்த்து தெரிவித்தார்.

திங்கள் மின்னிதழ் 17

---

# நவில்தொறும் நூல்நயம்

கற்க கசடற
karka.in

மாசிலன் ஆதல்

வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 55

இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்

சிறப்புத் தொடர் 5

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

22.03.24
வெள்ளிக்கிழமை
மாலை
6.30-7.45

நூல்–நூலாசிரியர்

வள்ளுவம்

4. பொருட் பயனிலை

பேராசிரியர் வ. சுப. மாணிக்கனார்
மேனாள் துணைவேந்தர்,
காமராசர் பல்கலைக் கழகம், மதுரை

நான்காவது அத்தியாயம் பற்றிய நயவுரை

திரு. மு. இராமநாதன் B.E. MBA.,
தமிழார்வலர், திருச்சிராப்பள்ளி

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

1917 - 1989

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

கற்க கசடற
karka.in

வலைத்தமிழ்.காம்

நிகழ்வு 56

இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்

சிறப்புத் தொடர் 6

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

29.03.24
வெள்ளிக்கிழமை
மாலை
6.30-7.45

நூல்–நூலாசிரியர்

வள்ளுவம்

5. இன்மை நிலை

பேராசிரியர் வ. சுப. மாணிக்கனார்
மேனாள் துணைவேந்தர்,
காமராசர் பல்கலைக் கழகம், மதுரை

ஐந்தாவது அத்தியாயம் பற்றிய நயவுரை

நற்றமிழ் செ.வ. இராமானுசன் (ப.நி),
இராணுவப் பொறியியல் துறை

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

1917 - 1989

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

கற்க கசடற
karka.in

மனத்துக்கண் மாசிலன் ஆதல்

வலைத்தமிழ்.காம்

நிகழ்வு 57

இணைந்து வழங்கும்

## நவில்தொறும் நூல்நயம்

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

05.04.24 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45

நூல்–நூலாசிரியர்

தெய்வப் புலவர் திருவாய்மொழி

பேராசிரியர் அரங்க இராமலிங்கம்

முன்னைத் தலைவர்,

தமிழ் மொழித்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்.

நூல் பற்றிய நயவுரை

திரு.கா.வி.ஸ்ரீநிவாஸமூர்த்தி IRS

உதவி ஆட்சியர் (ப.நி), பாரதியியல் ஆர்வலர், சென்னை.

Zoom ID: 988 6476 9563 Passcode: 1330

தெய்வப் புலவர் திருவாய்மொழி
அரங்க. இராமலிங்கம்

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

---

கற்க கசடற
karka.in

மனத்துக்கண் மாசிலன் ஆதல்

வலைத்தமிழ்.காம்

நிகழ்வு 58

இணைந்து வழங்கும்

## நவில்தொறும் நூல்நயம்

சிறப்புத் தொடர் 7

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

12.04.24 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45

நூல்–நூலாசிரியர்

வள்ளுவம்

6. அறிவுப் பிறப்பு

பேராசிரியர் வ.சுப. மாணிக்கம்

மேனாள் துணைவேந்தர்

காமராசர் பல்கலைக்கழகம், மதுரை

ஆறாவது அத்தியாயம் பற்றிய நயவுரை

மருத்துவர் திரு.சு.கார்த்தி MBBS., MD (Pediatrics)

குழந்தை நல மருத்துவர், ஈரோடு.

Zoom ID: 988 6476 9563 Passcode: 1330

1917 - 1989

வள்ளுவம்
வ. சுப. மாணிக்கம்

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

---

கற்க கசடற
karka.in

மனத்துக்கண் மாசிலன் ஆதல்

வலைத்தமிழ்.காம்

நிகழ்வு 59

இணைந்து வழங்கும்

## நவில்தொறும் நூல்நயம்

சிறப்புத் தொடர் 8

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

19.04.24 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45

நூல்–நூலாசிரியர்

வள்ளுவம்

7. அறிவுக் கல்வி

பேராசிரியர் வ.சுப. மாணிக்கம்

மேனாள் துணைவேந்தர்

காமராசர் பல்கலைக்கழகம், மதுரை

ஏழாவது அத்தியாயம் பற்றிய நயவுரை

டாக்டர் சங்கர சரவணன்

இணை இயக்குநர், தமிழ்நாடு பாடநூல் கழகம்.

Zoom ID: 988 6476 9563 Passcode: 1330

1917 - 1989

வள்ளுவம்
வ. சுப. மாணிக்கம்

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

---

கற்க கசடற
karka.in

மனத்துக்கண் மாசிலன் ஆதல்

வலைத்தமிழ்.காம்

நிகழ்வு 60

இணைந்து வழங்கும்

## நவில்தொறும் நூல்நயம்

சிறப்புத் தொடர் 9

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

26.04.24 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45

நூல்–நூலாசிரியர்

வள்ளுவம்

8. குடும்ப வாழ்க்கை

பேராசிரியர் வ.சுப. மாணிக்கம்

மேனாள் துணைவேந்தர்

காமராசர் பல்கலைக்கழகம், மதுரை

எட்டாவது அத்தியாயம் பற்றிய நயவுரை

திருமதி க.சத்யபிரபா தங்கமணி BDS

பல் மருத்துவர், ஓசூர்

Zoom ID: 988 6476 9563 Passcode: 1330

வள்ளுவம்
வ. சுப. மாணிக்கம்

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

# திருக்குறள் தற்சார்பு

எங்கள் மாவட்டம்-எங்கள் பொறுப்பு, எங்கள் மாவட்டப் பயிற்சியாளர், எங்கள் மாவட்டத்தில் திருக்குறள் முற்றோதல் செய்த ஒருவருக்கு வேலை, எங்கள் மாவட்ட அறம்சார் புரவலர் திருக்குறளுக்கு முன்வருபவரை, அவரது வணிகத்தை நாங்கள் நாங்கள் முன்னிறுத்துவோம், எங்கள் மாவட்ட மாணவர்கள் பயன்பெறுகிறார்கள், எங்கள் மாவட்ட திருக்குறள் ஆளுமைகள் வழிகாட்டுகிறார்கள், எங்கள் மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து அரசின் பரிசினைப் பெற அதிக மாணவர்கள் திருக்குறள் படிக்கிறார்கள், எங்கள் மாவட்டத்தில் படித்து வெளிநாடு சென்றவர்கள் எங்கள் மாவட்டத்தில் திருக்குறள் படித்தவர்களுக்கு கல்வி, வேலைவாய்ப்பு, வெளிநாட்டு மாணவர் பயணம் என்று பலவகையில் துணைநிற்கிறார்கள்.

**திருக்குறள் புரவலராக உங்கள் மாவட்டத்தில்பொறுப்பேற்க அழைக்கிறோம்..**

**ஏற்கனவே பொறுப்பேற்றுள்ள புரவலர்களுக்கு நன்றி...!! நன்றி.. !!**

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. செயல்பாடுகளை கண்டறிந்து அறம் சார்ந்த மனிதர்கள், நிறுவனங்கள் அந்தந்த மாவட்டத்திலிருந்து அவர்கள் சார்ந்த மாவட்டத்தின் புரவலர் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்துகிறோம். மாணவர்களுக்கு சான்றிதழ் வழங்குதல், பரிசளித்தல், பகுதிநேர, முழுநேர திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர்களுக்கு ஊக்கத்தொகையை நேரடியாக வழங்குதல் உள்ளிட்டவற்றிற்கு அந்தந்த மாவட்டத்திலிருந்து "திருக்குறள் புரவலர்கள்" தேவை.

| | | | |
|---|---|---|---|
| Ariyalur<br>அரியலூர்<br>Your Photo / Business Photo | Chengalpattu<br>செங்கல்பட்டு<br>**மணி பெரியகருப்பன்,**<br>Ohio, USA | Chennai<br>சென்னை<br>Your Photo / Business Photo | Coimbatore<br>கோயம்புத்தூர்<br>Your Photo / Business Photo |
| Cuddalore<br>கடலூர்<br>Your Photo / Business Photo | Dharmapuri<br>தர்மபுரி<br>Your Photo / Business Photo | Dindigul<br>திண்டுக்கல்<br>Your Photo / Business Photo | Erode<br>ஈரோடு<br>Your Photo / Business Photo |

| | | | |
|---|---|---|---|
| Kallakurichi<br>கள்ளக்குறிச்சி<br>Your Photo / Business Photo | Kanchipuram<br>காஞ்சிபுரம்<br>Your Photo / Business Photo | Kanyakumari<br>கன்னியாகுமரி<br>Your Photo / Business Photo | Karur<br>கரூர்<br>**க.செங்குட்டுவன்**<br>Valluvar Science and Management College |
| Krishnagiri<br>கிருஷ்ணகிரி<br>Your Photo / Business Photo | Madurai<br>மதுரை<br>Your Photo / Business Photo | Mayiladuthurai<br>மயிலாடுதுறை<br>JENIFER SWEETS & BAKERY<br>**ஜெனீபர் பவுல்ராஜ்** | Nagappattinam<br>நாகப்பட்டினம்<br>Your Photo / Business Photo |
| Namakkal<br>நாமக்கல்<br>Your Photo / Business Photo | Perambalur<br>பெரம்பலூர்<br>Your Photo / Business Photo | Pudukkottai<br>புதுக்கோட்டை<br>Your Photo / Business Photo | Ramanathapuram<br>இராமநாதபுரம்<br>Your Photo / Business Photo |
| Ranipet<br>இராணிப்பேட்டை<br>Your Photo / Business Photo | Salem<br>சேலம்<br>**தங்கராசு பெரியசாமி** | Sivagangai<br>சிவகங்கை<br>Your Photo / Business Photo | Tenkasi<br>தென்காசி<br>Your Photo / Business Photo |
| Thanjavur<br>தஞ்சாவூர்<br>Your Photo / Business Photo | The Nilgiris<br>நீலகிரி<br>Your Photo / Business Photo | Theni<br>தேனி<br>Your Photo / Business Photo | Thirupattur<br>திருப்பத்தூர்<br>Your Photo / Business Photo |

| Tiruvallur<br>திருவள்ளூர் | Tiruvannamalai<br>திருவண்ணாமலை | Tiruvarur<br>திருவாரூர் | Vellore<br>வேலூர் |
| --- | --- | --- | --- |
| Your Photo / Business Photo | Your Photo / Business Photo | **திரு. இளங்கோ, சிங்கப்பூர்** | Your Photo / Business Photo |
| Viluppuram<br>விழுப்புரம் | Virudhunagar<br>விருதுநகர் | Pondicherry<br>புதுச்சேரி | Karaikkal<br>காரைக்கால் |
| Your Photo / Business Photo | Your Photo / Business Photo | **தலைவர், புதுவைத் தமிழ்ச்சங்கம்** | Your Photo / Business Photo |



# வள்ளுவமும் வலைத்தமிழும்

வலைத்தமிழ் தனித்து அல்லது பிற அமைப்புகளுடன் இணைந்து முன்னெடுத்துள்ள திருக்குறள் சார்ந்த 24 பரவலாக்கல் திட்டங்களை ஒரே இடத்தில் காண: **www.Thirukkural.ValaiTamil.com**

# திருக்குறள் நூல்கள் வழங்கிய மாவட்டங்களின் விவரம்

**மாவட்டங்களுக்கு சுமார் 1000 திருக்குறள் நூல்கள் வரை அனுப்பப்பட்டு மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து வழங்கப்பட்டது.**

| எண் | மாவட்டம் | நூல் வழங்கப்பட்டதா? | பயிற்சியாளர் |
|---|---|---|---|
| 1 | Dharmapuri தர்மபுரி | ஆம் | |
| 2 | Tiruvallur திருவள்ளூர் | ஆம் | |
| 3 | Tirunelveli திருநெல்வேலி | ஆம் | |
| 4 | Tiruvannamalai திருவண்ணாமலை | ஆம் | திரு .க.காமராசு |
| 5 | Kallakurichi கள்ளக்குறிச்சி | ஆம் | புலவர். ஐயா மோகன் |
| 6 | Cuddalore கடலூர் | ஆம் | |
| 7 | Chennai சென்னை | ஆம் | திரு. க.கோ.பழனி |
| 8 | Dindigul திண்டுக்கல் | ஆம் | திரு. வெ.செல்வன் |
| 9 | Karur கரூர் | ஆம் | |
| 10 | Mayiladuthurai - மயிலாடுதுறை | ஆம் | திரு. சரவணன் |
| 11 | Thanjavur தஞ்சாவூர் | ஆம் | திரு. கோபிசிங், திருமதி. ச.ஆனந்தி |
| 12 | Namakkal நாமக்கல் | ஆம் | திரு. க.காமராசு |
| 13 | Pondicherry - புதுச்சேரி | ஆம் | திருமதி. சங்கீதா கண்ணன் |
| 14 | Vellore வேலூர் | ஆம் | |
| 15 | Viluppuram விழுப்புரம் | ஆம் | |
| 16 | Kanyakumari கன்னியாகுமரி | ஆம் | கவிஞர். தமிழ்க்குழவி |
| 17 | Tiruchirappalli திருச்சி | ஆம் | |
| 18 | Tenkasi தென்காசி | ஆம் | திரு.ஸ்ரீ தர் |
| 19 | Pudukkottai புதுக்கோட்டை | ஆம் | திரு. தங்கமணி |
| 20 | Salem சேலம் | ஆம் | திரு. க.காமராசு |
| 21 | Thirupattur திருப்பத்தூர் | ஆம் | |
| 22 | Perambalur பெரம்பலூர் | ஆம் | |
| 23 | Ariyalur அரியலூர் | ஆம் | |
| 24 | The Nilgiris நீலகிரி | ஆம் | |
| 25 | Tiruvarur திருவாரூர் | நூல்சென்றது | |
| 26 | Madurai மதுரை | ஆம் | |
| 27 | Nagappattinam நாகப்பட்டினம் | நூல்சென்றது | |
| 28 | Ramanathapuram இராமநாதபுரம் | நூல்சென்றது | |
| 29 | Chengalpattuசெங்கல்பட்டு | ஆம் | திரு. த.தமிழ்மகிழ்நன்,திருமதி. கற்பகவள்ளி,திருமதி.சிந்தாமணி |
| 30 | Coimbatore கோயம்புத்தூர் | நூல்சென்றது | முனைவர்.மோகனசுந்தரம் |
| 31 | Tiruppur திருப்பூர் | நூல்சென்றது | |
| 32 | Kanchipuram காஞ்சிபுரம் | ஆம் | திரு. குறள்அமிழ்தன், |
| 33 | Virudhunagar விருதுநகர் | ஆம் | |
| 34 | Theni தேனி | ஆம் | |
| 35 | Erode ஈரோடு | நூல்சென்றது | |
| 36 | Sivagangai சிவகங்கை | ஆம் | திரு. ஜெயம்கொண்டான் |
| 37 | Ranipet இராணிப்பேட்டை | நூல்சென்றது | |
| 38 | Thoothukudi தூத்துக்குடி | நூல்சென்றது | |
| 39 | Krishnagiri கிருஷ்ணகிரி | நூல்சென்றது | |
| 40 | Karaikal -காரைக்கால் | இல்லை | |

# திருக்குறள் புரவலர்களுக்கு நன்றி...

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்திற்கு ஒரு தமிழ் பேராசிரியரை தொடக்கத்தில் பகுதி நேரமாகவும், தேவையானால் முழு நேரமாகவும் வழங்கி, "குறள் வழி" திருக்குறள் மாத இதழ் அட்டைப்பட விளம்பரமாக மாதம் ரூபாய் 10000 வழங்கி ஆதரவு அளிக்கும் வள்ளுவர் அறிவியல் மற்றும் மேலாண்மைக் கல்லூரிக்கும், அதன் தாளாளர் திரு.செங்குட்டுவன் அவர்களுக்கும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.






இவ்விதழ் மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள், பயிற்சியாளர்களுக்கு அச்சுப்பிரதியாக இலவசமாக சென்று சேரவேண்டும் என்று புரவலராக தன்னை இணைத்துக்கொண்ட நாமக்கல் நண்பர் திரு.கதிரவன் செழியன் அவர்களுக்கு உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். நன்றி... நன்றி...



திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள்

மாணவர் பெயர் | நாடு: Select | மாநிலம்: Select | SEARCH

பதிவு செய்ய

| # | மாணவர் எண் | பெயர் | நாடு | மாநிலம் | மாவட்டம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 1. | 331 | ச.கோபிகா | India | Tamil Nadu | tiruchirappalli | 2022 |
| 2. | 330 | மு. நிஷார்னியா | India | Tamil Nadu | thanjavur | 2022 |
| 3. | 329 | க. சந்தான லட்சுமி | India | Tamil Nadu | kanyakumari | 2022 |
| 4. | 328 | சு.சுசாந்திகா | India | Tamil Nadu | viluppuram | 2015 |
| 5. | 327 | சு.சுசாந்திகா | India | Tamil Nadu | viluppuram | 2015 |
| 6. | 326 | ர. செஞ்சோலை | India | Tamil Nadu | viluppuram | 2022 |
| 7. | 325 | ஸ்ரீ .ஸ்ரீ வர்ஷன் | India | Tamil Nadu | nagapattinam | 2022 |
| 8. | 324 | சீ. யாழ்த்தமிழ் | India | Tamil Nadu | viluppuram | 2022 |
| 9. | 323 | டே.ஜான் டேவிட் | India | Tamil Nadu | kanyakumari | 2022 |
| 10. | 322 | இரா.ராஜ்குமார் | India | Tamil Nadu | theni | 2015 |



## இதுவரை உலக அளவில் திருக்குறளை முழுமையாகப் படித்து முற்றோதல் செய்துள்ளவர்கள் யார்? ஆவணப்படுத்த புதிய இணையதளம்..

2000 வது ஆண்டில் திருக்குறள் முற்றோதல் செய்யும் மாணவர்களுக்கு பரிசுத் தொகை வழங்கும் திட்டத்தை அரசு தொடங்கியது. கடந்த 23 ஆண்டுகளில் தமிழ்நாடு முழுதும் சுமார் 812 பேர் 1330 திருக்குறளையும் கூறி பரிசு பெற்றுள்ளார்கள் என்று தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர்.அவ்வை அருள் தெரிவித்துள்ளார். 14.04.1972 முதல் இயங்கிவரும் திருச்சி திருமூலநாதன் அறக்கட்டளை 01.05.1998 முதல் 26 ஆண்டுகளாக திருக்குறள் ஒப்பிடுதல் போட்டியை நடத்திவருகிறது. அவர்கள் வழங்கும் 2000 ருபாய் பரிசைப் பெற்றவர்கள் 400 பேருக்கு மேல் உள்ளனர். இதுபோல் வேறு அமைப்புகளும் செய்துகொண்டிருக்கலாம். அமெரிக்கா உள்ளிட்ட வெளிநாடுகளில் முற்றோதல் செய்தவர்கள் பலர் உள்ளனர்.

இவர்களை ஒரு குழுமமாக தொகுத்து வெளியிடுவதும், இவர்களுக்கு அனைத்திலும் தமிழ்ச்சமூகம் கல்வி, வேலைவாய்ப்பு, மேடைவாய்ப்பு, பொருளாதார வாய்ப்பு, தொழில் உள்ளிட்ட அனைத்திலும் முன்னுரிமை வழங்கவும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் ஒரு சிறப்பு இணையதள வசதியை ஏற்படுத்தி ஆவணப்படுத்தி வெளியிடுகிறது. உங்களுக்குத் தெரிந்தவர்களை பதிவு செய்ய இங்கு செய்யவும்.

முதல்கட்டமாக இவர்கள் அனைவர்க்கும் உலகத்திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் திருக்குறள்-இளநிலை சான்றிதழ் வழங்கி, பொருள் உணர்ந்து படித்துள்ளவர்களை அடையாளம் கண்டு திருக்குறள்-முதுநிலை சான்றிதழ் வழங்கவிருக்கிறோம். இளநிலை முடித்தவர்கள் , முதுநிலை படிக்க ஊக்குவிக்கப்படுகிறார்கள்.

https://www.valaitamil.com/mutrothal-students-register-list.php

or www.Thirukkural.ValaiTamil.com









 More from Kural Mutrothal




குறள் வழி - மாத மி...
February 1, 2024




குறள் வழி - மாத மி...
December 23, 2023




குறள் வழி - மாத மி...
November 9, 2023




குறள் வழி - மாத மி...
October 10, 2023

https://www.valaitamil.com/literature_thirukkural_kural-vazhi/









**குறள் சொல்வோம்..!**
**குறள் வழி வாழ்வோம்..!**







## மாணவ- மாணவியர்களுக்கு ஓர் இனிய செய்தி

**2024-2025 ஆம் கல்வியாண்டில் நமது வள்ளுவர் கல்லூரியில் சேரும் மாணவ மாணவியர்களுக்கு**

**மூன்றாண்டுகளுக்கும் இலவசக் கல்வி !**

- 500 திருக்குறள்களை ஒப்புவித்தால் ஒரு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1000 திருக்குறள்களை ஒப்புவித்தால் இரண்டு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1330 திருக்குறள்களை ஒப்புவித்தால் மூன்றாண்டும் கல்லூரிக் கட்டணம் இலவசம்.

### COURSES OFFERED

UNDER GRADUATE PROGRAMMES:

- B.A. English
- B.A. Tamil
- B.A. Public Administration
- BBA
- B.Com
- B.Com. (Computer Applications)
- B.Com. (Professional Accounting)
- BCA
- B.Sc. Computer Science
- B.Sc. Fashion Technology & Costume Designing
- B.Sc. Hotel Management & Catering Science
- B.Sc. Mathematics
- B.Sc. Physics

POST GRADUATE PROGRAMMES:

- M.A. English
- M.Com. (Computer Applications)
- M.Sc. Computer Science
- M.Sc. Mathematics

RESEARCH PROGRAMMES:

- M.Phil. Commerce
- Ph.D. Commerce

DIPLOMA COURSES:

- Diploma in Food Production
- Diploma in Banking & Finance

PROFESSIONAL PROGRAMME

- M.B.A




@ valluvarcollege @VCSM Events www.vcsm.ac.in 9944450507 / 9791726481 / 9791736481